## முதற் பதிப்பின்

## முகவுரை

வீரவேல் முருகனுக்கு உரியது; வல் வில் இராமனுக்கு உரியது. முன்னாள் அறந்திறம்பிய அவுணரை அழித்தது முருகன் வேல்; இரக்கமற்ற அரக்கரை அறுத்தது இராமன் வில். ஆதலால், 'வேலுண்டு வினையில்லை; வில்லுண்டு பயமில்லை' என்றிருப்பர் நல்லோர். கொடியவரை அழித்து, அடியவரை ஆதரிக்கும் வேலின் செம்மையும், வில்லின் பெருமையும் இச்சிறு நூலால் ஒருவாறு விளங்கும்.

இந் நூலில் உள்ள 'கம்பரும் கச்சியப்பரும்' என்னும் கட்டுரை சென்னைப் பல்கலைக் கழக ஆராய்ச்சிப் பத்திரிகையில் முதலில் வெளியிடப்பட்டது. அதனை இந்நூலிற் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த சென்னைப் பல்கலைக் கழகத்தாருக்கு என் மனமார்ந்த நன்றி உரியதாகும்.

சென்னை,
26—1—1944

ரா. பி. சேதுப்பிள்ளை.

# முருகன் பெருமை*

பாரத நாட்டில் முருகன் வழிபாடு தொன்று தொட்டு நிகழ்ந்துவருகின்றது. முருகன் என்னும் சொல் இளமையும் அழகும் வாய்ந்த பெருமானைக் குறிக்கும். வேள் என்ற இனிய சொல்லையும் அதனோடு சேர்த்து முருகவேள் என்றும் வழங்குவதுண்டு. விரும்பத்தக்க பொருளை வேள் என்னும் சொல் உணர்த்துவதாகும். காதல் விளைக்கும் காமனைக் கருவேள் என்றும், கருணை விளைக்கும் முருகனைச் செவ்வேள் என்றும் பழந் தமிழ் நூல்கள் கூறும். சோழ வள நாட்டின் தலைநகராகிய பூம்புகார் நகரத்தில், முற்காலத்தில், "பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும், அறுமுகச் செவ்வேள் அணி திகழ் கோயிலும்" ஏனைய கோயில்களும் அடுத்தடுத்து அமைந்திருந்தன என்று சிலப்பதிகாரம் குறிக்கின்றது. இவ் வழகிய அடிகளில் முருகனை, "அறுமுகச் செவ் வேள்" என்று அக் காவியம் கூறும் திறம் அறியத்

---

* இது, திருச்செந்தூர் முருகன் கோயிலில் 28-6-41-ல் நிகழ்ந்த அஷ்டபந்தன கும்பாபிஷேகத் திருவிழாவில் செய்த சொற் பொழிவின் சுருக்கம்.

தக்கதாகும். இன்னும், சேயோன் என்றும், சேய் என்றும் முருகன் தமிழ்நூல்களிற் குறிக்கப்படுகின்ருர். அப் பெருமான், 'ஆலயர் கடவுளின்' அருமைப் புதல்வர் ஆதலால் சேயோன் என்னும் பெயர் பெற்ருர். "சேயோன் மேய மைவரை உலகம்" என்று குறிஞ்சி நிலத்தைக் குறித்தனர் தொல்காப்பியனுர்.

இத் தகைய பெருமை வாய்ந்த முருகன், கோலமா மயில்மீது குலாவும் அழகினை, ஆன்ருேர் அருளிய திருப் பாட்டிலே காணலாம். பாலனுய்த் தோன்றிய முருகனை எளிதில் வெல்லலாகுமென்று கருதிப் போர்தொடுத்த சூரன், பார்க்குமிட மெங்கும் நீக்கமற நிறைந்துநின்ற அப் பெருமானது வடிவத்தைக் காணும் பேறு பெற்றபொழுது,

"கோலமா மஞ்ஞை தன்னில் குலவிய குமரன் தன்னைப்
பாலனென் றிருந்தேன் அந்நாள் பரிசிவை உணர்ந்தி லேன்யான்
மாலயன் தமக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற மூர்த்திஇம் மூர்த்தி யன்ருே"

என்று வாயாரப் புகழ்ந்தான். ஆகவே, நீலமா மயில் மீது இலங்கும் பாலனே யாவர்க்கும் மூலகாரணமாய் உள்ள மூர்த்தி என்பது இனிது விளங்குவதாகும்.

அடியார்க்கு, முருகன் அருள் செய்யுங் கோலம் அழகிய குழந்தைக்கோலம். மாற்ருரை அழிப்பதற்கு அப் பெருமான் கொள்ளுங் கோலம் வீரப் பெருங் கோலம். இவ் வுண்மை நக்கீரதேவர் திருவாக்கால் நன்கு விளங்கும் :

"குன்றம் எறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்தலைய பூதப் பொருபடையாய் - என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாய்என் உள்ளத் துறை"

என்று அவர் வேண்டுகின்றார். அல்லோரை அழித்து, நல்லோரைக் காக்கும் திறம்வாய்ந்த முருகனைத் தம் மனக் கோயிலில் அமைத்து வழிபடக் கருதிய நக்கீரர், அப் பெருமானை நோக்கி, "குருகு பெயர்க்குன்றம் கொன்ற முருகா! அலைகடலின் நடுவே அமைந்த வீரமா நகரில் அரசு வீற்றிருந்த சூரனை அடர்த்த வீரா! பூதப் பெரும்படையின் தலைவா! என்றும் உனக்குளதாய இளநலம் காட்டி அடியேற்கு அருளல் வேண்டும்; அழியாத அழகு வாய்ந்த இளம் பாலனாய்க் காட்சிதரல் வேண்டும்; நீள நினைந்து உருகும் என் நெஞ்சினுள்ளே என்றும் நின்று அருள்புரிதல் வேண்டும்" என்று வேண்டுகின்றார்.

புலவர் பெருமானாகிய நக்கீரர் முருகன் அருளை நிரம்பப் பெற்றவர். ஒரு கொடும்பூதத்தின் வாயினின்றும் அவரை முருகப்பெருமான் காத்தருளினாரென்று பழங் கதை கூறும். அதற்குச் சான்று அவர் பாடிய வெண்பாவிலும் காணப்படும்:

"குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும் - இன்றென்னைக்
கைவிடா நின்றதுவும் கற்பொதும்பிற் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல்"

என்ற வெண்பாவில் அசுரரைக் கொன்று அமரர் இடர் தீர்த்த வேலனே, தம்மையும் தலையளித்து ஆட்கொண்

டருளி வெம்பூதத்தை வென்று, கற்குகையினின்றும் விடுவித்தான் என்று நக்கீரர் உள்ளுருகிப் பாடுகின்றார். முருகன் கையில் அமர்ந்த வலிமை சான்ற வேற் படையை, "மெய்விடா வீரன் கைவேல்" என்று அவர் கூறும் முறை அறிந்து போற்றத்தக்கதாகும். இவ் வுலகில் என்றும் பொய்ம்மையாளரை வென்று, மெய் யடியாரைக் காக்கும் படை முருகன் கையிலமர்ந்த வடிவேல் என்பது நக்கீரர் கருத்து.

இத் தகைய பெருமை சான்ற பாடல்களை அருளிச் செய்த நக்கீரதேவர், திருச்சீரலைவாய் என்னும் திருச் செந்தூரில் உள்ள முருகப்பெருமானிடம் பெரிதும் ஈடு பட்டவர் என்பது அவர் வாக்கால் அறியப்படுகின்றது. 'கத்துந் தரங்கம் எடுத்தெறியும் கருங்கடலின்' அருகே அமர்ந்த செந்திலம்பதியை, "உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர் அலைவாய்" என்று உளங் குளிர்ந்து நக்கீரர் பாடினார். திக்கெலாம் புகழுறும் திருநகராகச் செந்திலம்பதி முற்காலத்தில் விளங்கியமையாலன்றோ, "உலகம் புகழ்ந்த சீர்அலைவாய்" என்று பொய்யறியாப் புலவர் பெருமான் அதைப் போற்றுவாராயினர்? மேலும், "ஓங்குயர் அலைவாய்" என்று அவர் வாக்குப் பிறந்தமையால், இன்றும் செந்திலம்பதி அருளாலும் பொருளாலும், அறத்தாலும், ஏனைய திறத்தாலும் ஓங்கி உயர்ந்து வருகின்றது.

திருச்செந்தூரில், முருகன், ஆறுமுகங்களோடும் பன்னிரு கரங்களோடும் விளங்கும் பான்மையை நக்கீரர்

தமது பட்டிலே நன்கு படமெடுத்துக் காட்டுகின்றார். அவர் பாட்டைத் தழுவியே திருப்புகழ் பாடிய அருண கிரிநாதரும்,

"ஏறுமயி லேறிவிளை யாடுமுகம் ஒன்றே
ஈசனுடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரைவ தைத்தமுகம் ஒன்றே
வள்ளியைம ணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுக மான்பொருள் நீஅருளல் வேண்டும்
ஆதிஅரு ணசலம்அ மர்ந்தபெரு மாளே"

என்று பாடிப் பரவுவாராயினர். இன்னும், நக்கீர தேவருக்குத் திருச்செந்தூர் முருகனிடம் இருந்த ஆர்வம், அவர் பாடிய திருமுருகாற்றுப்படையின் இறுதிப் பாட்டாலும் இனிது விளங்குகின்றது :

"முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே - ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்"

என்பது அவர் வாக்கு. ஈசனுக்கினிய மைந்தனாகவும், மாயோனின் மருகனாகவும், யானைமுகன் தம்பியாகவும் விளங்கும் முருகனைச் 'செந்தி முதல்வனே' என்றழைத்து, அப் பெருமான் சேவடியைத் 'தண்டைக் கால்' என்று நக்கீரர் வழுத்தும் முறை அழகியதாகும். வீரப்புகழ் வாய்ந்து விளங்கும் வேலனை, எப்பொழுதும் பச்சைப்பசும் பாலனாக வழிபடக் கருதும் நக்கீரரது ஆர்வம், "நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்

நம்பியே கைதொழுவேன் நான்" என்னும் உருக்கமான மொழிகளில் வெளிப்படுகின்றது. நெஞ்சம் குழைந்து அஞ்சி அயரும் அடியார் மனத்தில், முருகனது ஆறு முகமும் அழகுற மிளிரும்; அஞ்சேல் என்று அபய மளிக்கும்; வெற்றிவேல் அவர் கண்ணெதிரே விளங்கித் தோன்றும். ஒருமையுடன் இருந்து அப் பெருமானை ஒருகால் நினைத்தால் அவர் திருவடி உடனே தோன்றும். இத் தகைய காலின் செம்மையையும், வேலின் வெம்மையையும் அறிந்த நக்கீரதேவர்,

**" அஞ்சு முகம்தோன்றின் ஆறு முகம்தோன்றும்**
**வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்—நெஞ்சில்**
**ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும்**
**முருகாஎன் றோதுவார் முன் "**

என்று அழகுறப் பாடியருளினர். இன்னும், செந்தி லம்பதியில் வாழும் கந்தனையே அப் புலவர்பெருமான் நம்பி வாழ்ந்தவர் என்பது,

**" உன்னை யொழிய ஒருவரையும் நம்புகிலேன்**
**பின்னை ஒருவரையான் பின்செல்லேன் - பன்னிருகைக்**
**கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்**
**வேலப்பா செந்தி வாழ்வே "**

என்னும் இன் கவியாலும் அறியப்படும்.

செந்தமிழ்ப் பெருங் காவியமாகிய சிலப்பதிகாரத் தில், மலைநாட்டுக்குறவர் முருகனை வணங்கிய முறை விரித்துச் சொல்லப்படுகின்றது. குறக் குல மங்கையர் முருகனைக் குறித்துக் குரவைக் கூத்தாடும் வழக்கம்

உண்டென்பது அக்காவியத்தால் அறியப்படும். குறிஞ்சி நிலத் தெய்வமாகிய முருகன்,

> **" சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன் றும்**
> **ஏரகமும் நீங்கா இறைவன் "**

என்பது குரவைப் பாட்டு. இவ் வழகிய பாட்டில் திருச்சீரலைவாயாகிய திருச்செந்தூரை முதன்மையாக அமைத்திருப்பது கருதத்தக்கதாகும். நக்கீரதேவர் 'சீர் அலைவாய்' என்று புகழ்ந்தவாறே, இளங்கோ வடிகளும் 'சீர்கெழுசெந்தில்' என்று திருச்செந்தூரைச் சிறப்பித்துள்ளார். கொங்கு நாட்டில் அமைந்த முருகப் பதிகளுள் தலைசிறந்தது திருச்செங்கோடு என்னும் மலைப் பதியாகும். அப் பழம்பதி, தேவாரத் திருப்பாசுரத்தில் 'கொடிமாடச் செங்குன்றூர்' என்று குறிக்கப்படுதலால் செந்நிறம் வாய்ந்த அக்குன்றின்மீது செல்வ நெடு மாடங்கள் சிறப்புற்று விளங்கிய தன்மை நன்கறியப் படும்.

குன்றுதோறாடும் குமரனைக் குறவர்கள் தம் குல தெய்வமாகக் கொண்டு போற்றுவர். விலங்கினங்களை வேட்டை யாடும் வேடரும், புள்ளினங்களை வலையிற் பிணிக்கும் *புளினரும் முருகனோடு உறவுகொண்டாடும் முறை அறிந்து இன்புறற்பாலதாகும்.

திருக்குற்றால மலைச்சாரலில் பறவைகளை வேட்டை யாடக் குறவர் இருவர் குதித்துச் சென்றார்கள். அணி அணியாக ஆலாவும் கொக்கும், காடையும் கம்புளும், மாடப்புறுவும் மடமயிலும், மற்றைய பறவைகளும்

*மலைப்புளினர் இப்போது மலைப்பளிங்கர் என்று குறிக்கப்படுவர்.

பறந்து ஓடிவந்தன. அவற்றைப் பிடிப்பதற்கு விரைவில் கண்ணி கொண்டுவருமாறு கூவும்பொழுது குறவன் பாடிய பாடல், குறிஞ்சிநிலத் தெய்வமாகிய முருகனைக் குறித்ததாகும்.

“மீறுமி லஞ்சிக்கு றத்தியைக் கொண்டசெவ்
வேட்குற வன்முதல் வேட்டைக்குப் போனநாள்
ஆறுநாட் கூடிஒ ருகொக்குப் பட்டது
அகப்பட்ட கொக்கைஅ வித்தொரு சட்டியில்
சாருக வைத்தபின் வேதப்பி ராமணர்
தாமும்கொண் டார்சைவர் தாமும்கொண் டார்தவப்
பேருமு னிவரும் ஏற்றுக்கொண் டார்இதைப்
பிக்குச்சொல் லாமலே கொக்குப்ப டுக்கவே -
கண்ணி கொண்டு வாடா, குளுவா”

என்று குறவன், பணிக்கின்றான். கண்ணியைக் கையிலே கொண்டு பையவந்த குளுவனை நோக்கி, ‘அடே! குளுவா! தேசத்துக் கொக்கெல்லாம் பல திக்குக்களினின்றும் பறந்தோடி வருகுது பார்! அவற்றை வலையிலே தட்டி வீழ்த்தலாமோ என்று நீ சிறிதும் தயங்கவேண்டாம். நம் குல முதல்வனாகிய முருகனே கொக்கு வேட்டையாடி நமக்கு வழிகாட்டி யுள்ளார். அப் பெருமான் ஆடிய முதல்வேட்டை கொக்கு வேட்டைதான். ஒரு பெருங்கொக்கை அடிப்பதற்கு அவர் ஆறுநாள் தொடர்ந்து திரிந்தார்; கடைசியாக அக் கொக்கை அடித்தார். அடித்த கொக்கை அவித்துச் சாறாக்கிச் சட்டியிலே வைத்தார்கள். சட்டியில் வைத்த சாற்றை, வேதியர் வியந்து உண்டார்கள்; சைவர்கள் போற்றி

மகிழ்ந்தார்கள் ; முனிவர்கள் தங்கள் அருந்தவத்தின் பயனாக அதனை ஏற்றுக்கொண்டார்கள். ஆதலால், நாமும் கொக்குவேட்டையாடுவோம் வாடா' என்கிறான் குறவன். குறிஞ்சித் தெய்வமாகிய முருகப்பிரான் வேட்டையாடி ஒரு கொக்கை அடித்துக் கொடுத்தார் என்றும், செந்தண்மை பூண்ட அந்தணரும், சீலம் வாய்ந்த சைவரும், மன்னுயிரை எல்லாம் தம்முயிர் போல் போற்றும் முனிவரும் கொக்குச்சாற்றை விரும்பியுண்டார்களென்றும் குறவன் கூறுவது வியப்பாகத் தோன்றுகின்ற தன்றோ ?

வெளிப்படையாக இவ்வாறு பொருள் படுகின்ற குறவன் வாக்கிலே கந்தபுராணக் கதை முழுவதும் அடங்கியிருக்கின்றது. அசுரர் குலத்தின் தலைவனாகிய சூரனை வென்றழிப்பதற்காக முருகன் புறப்பட்டார். அப் பாலனை எளியன் என்று எண்ணிய சூரன் ஆறு நாள் அரும்போர் புரிந்து அலைக்கழித்தான். அவன் எங்கெங்கே சென்றாலும் அங்கங்கே முருகனும் சென்றார். கடைசியாகப் பாலனை வஞ்சிக்கக் கருதிய சூரன் ஒரு மாமரத்தின் வடிவெடுத்து நின்றான். மாமரத்திற்குக் கொக்கு என்பது ஒரு பெயர். உருமாறிக் கொக்காக நின்ற சூரனை முருகன் வேலால் எறிந்து வீழ்த்தினார். அசுரனது ஆணவம் அழிந்தது. இரு கூறாகப் பிளந்த மாமரச் சூரன் சேவலும் மயிலுமாகி முருகன் சேவடியை அடைந்தான். இவ்வாறு மாமரமாய் நின்ற மாறுபடு சூரனை வென்று, அவன் ஆணவத்தை அழித்த செய்கையைக் குறவன், 'ஆறுநாள்

கூடி ஒரு கொக்குப் பட்டது' என்றும், 'அகப்பட்ட கொக்கை அவித்து ஒரு சட்டியில் சாறுக வைத்தார்கள்' என்றும் நயம்பட உரைத்தான். சட்டி என்பது சஷ்டி யாகும். சாறு என்ற சொல் திருவிழா என்று பொருள் படும். ஆகவே, சூரபதுமனை முருகன் வென்று இவ் வுலகிலுள்ள நல்லோரை வாழ்வித்த அரும் பெருஞ் செயலை ஆறுநாள் கந்தசட்டித் திருநாளாகக்கொண்டு ஆன்றோர் போற்றுகின்றார்கள் என்பது அப் பாட்டின் கருத்தாகும்.

முருகப்பெருமானைக் கலியுக வரதன் என்றும், கண்கண்ட தெய்வம் என்றும் மெய்யுணர்வு பெற்ற மேலோர் பாடிப் பரவியுள்ளார்கள். திருச்செந்தூருக்கு அண்மையிலுள்ள ஸ்ரீவைகுந்தம் என்னும் சிறந்த ஊரிலே பிறந்தருளிய பெரியார் குமரகுருபர அடிகள். அவர் செந்திலாண்டவனுக்கு வழிவழி யடிமை செய்யும் தொண்டர் குலத்திலே தோன்றியவர். ஐந்து வயதளவும் அவர் வாய்திறந்து பேச வகையற்றிருந்தார். வாயில்லாப் பாலனைக்கொண்டு வேலன் சந்நிதியில் இட்டு அவர் பெற்றோர்கள் பாடு கிடந்தார்கள். அன்பர்க்கு இரங்கி அருள்செய்யும் செந்திலாண்டவன் அப் பிள்ளையின் திருவாக்கைத் திறந்துவிட்டார். வாக்குப்பெற்ற குமரகுருபர அடிகள் பாடிய முதற் பாட்டு, 'கந்தர் கலிவெண்பா' ஆகும். அப் பாட்டை அன்புடன் பாடிக் கலிதீர்ந்த மாந்தர் எண்ணிறந்தவர் என்பர். இத் தகைய பெருமை வாய்ந்த குமரகுருபரர், வைத்தீசுரன் கோவில் என்று இக்காலத்தில் வழங்கும்

புள்ளிருக்கு வேளூரில் கோயில் கொண்டுள்ள முருகப் பெருமான்மீது, ஒரு பிள்ளைத்தமிழ் பாடினார். அப் பிள்ளைத்தமிழில் முத்துக்குமாரனோடு விளையாடும்படி அம்புலியை அழைக்கின்ற பருவத்தில், குமரகுருபர அடிகள்,

"விழியாக முன்னின்று தண்ணளி சுரந்(து) அவர்கள்
வேண்டிய வரங்கொடுப்பான்
மெய்கண்ட தெய்வம்இத் தெய்வமல் லால்புவியில்
வேறிலை என்றுணர்தியால்
அழியாத வீடும் தரக்கடவன் இவனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே"

என்று கூறும் திறம் அறியத் தக்கதாகும்.

திருச்செந்தூரில் குமரகுருபர அடிகளைப் போலவே மற்றொரு சிறந்த கவிஞரும் முருகன் திருவருளைப் பெற்றார். அவர் சேதுநாடு என்னும் இராமநாதபுரம் ஜில்லாவிலுள்ள சந்நாசி கிராமத்தைச் சேர்ந்த பகழிக் கூத்தர். அவர் பெற்றோர் வழிவழியாகத் திருமாலுக்கு அடிமைசெய்யும் பெற்றியர். அம் மரபிலே பிறந்து பரம பாகவதராய் விளங்கிய பகழிக்கூத்தர், முறையாகக் கலைபயின்று இனிய தமிழ்க்கவி பாடும் திறமை பெற்றார். தமிழ்ப்புலமை முற்றிவருங்காலத்தில் கடும் பிணி யொன்று அவரைத் தாக்கியது. குடரோடு

துடக்கி முடக்கிய சூலைநோயின் கொடுமைக்கு ஆற்ருது கூத்தர் சுழன்று துடித்தார்; மருந்துகள் பலவும் அருந்திஞர்; மந்திரம் நவின்ருர். ஆயினும் அந் நோயின் வேகம் சிறிதும் குறைந்தபாடில்லை. அந்த நிலையில் சூரனைக்கொன்று அடியார் இடர்தீர்த்த முருகன் திருவுருவம் அவர் மனக்கண்ணெதிரே மிளிர்ந்தது. “நெஞ்சில், ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும், முருகா என்ருேதுவார் முன்” என்னும் உண்மையைக் கூத்தர் கண்கூடாகக் கண்டார்; ‘உயிரைக் கையிலே பிடித்துக்கொண்டு’ திருச்செந்தூரை வந்தடைந்தார்; அலைகடலோரத்திலே ஆறுமுகச் செவ்வேளைக்கண்டு ஆனந்த பரவசமுற்ருர். செந்திற்பதியில் வீசிய கடற்காற்றும், செவ்வேளின் அருட்கோலமும் பகழிக் கூத்தர் உள்ளத்தைக் கொள்ளைகொண்டன. அப்பொழுது, அவர் பாடிய தெள்ளிய பிள்ளைத்தமிழ், ‘திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்’ என்று போற்றப்படுகின்றது.

“பேரா தரிக்கும் அடியவர்தம்
பிறப்பை யொழித்துப் பெருவாழ்வும்
பேறும் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமா னென்னும் பேராளா”

என்று தொடங்கும் திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்ப் பாட்டு இசைத்தட்டின் வாயிலாக இந் நாளில் எல்லோர்க்கும் இன்பம் பயக்கின்றது. பிள்ளைத்தமிழைப் பாடி முடித்தவுடன், பொல்லாத சூலைநோய் பகழிக்

கூத்தரை விட்டொழிந்தது. அப்போது இன்பக்கடலில் மூழ்கி எழுந்து, முருகன் முன்னே நின்று ஆடிப் பாடி அகங்குழைந்தார் கூத்தர்.

ஏறக்குறைய இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு மதுரையில் அரசாண்ட நாயக்க மன்னரது பிரதிநிதியாகத் தென்பாண்டிநாட்டைப் பரிபாலனம் செய்த பெரியார், கார்காத்த குலதிலகராகிய வடமலையப் பிள்ளையன் ஆவர். அவர் அருட் செல்வமும் பொருட் செல்வமும் அமையப்பெற்றவர்; திருச்செந்தூர் முருகனைத் தம் குலதெய்வமாகக் கொண்டவர். அன்னார், கண்ணும்கருத்துமாகத் தென்பாண்டி நாட்டைக்காத்து வருங் காலத்தில் திருச்செந்தூரில் அமர்ந்தருளும் அறுமுகப்பெருமான் திருவுருவத்தைக் கட்டிப் பொன்னால் அமைந்ததென்று கருதியோ, வேறுகாரணம் பற்றியோ, மேலை நாட்டுக் கடலாடிகள், நள்ளிரவிற் கவர்ந்து தம் கப்பலில் ஏற்றிக் கடலில் விரைந்து சென்றார்கள். சிறிது தூரம் சென்றதும் கடுங்காற்று வீசத்தொடங்கிற்று. கடல் கொந்தளித்தது. கொள்ளையர் மரக்கலம் தள்ளாடத் தலைப்பட்டது. கலத்தின் அபாயநிலை கண்ட கள்வர்கள் அறுமுகன் உருவத்தைக் கடலிலே தள்ளி விட்டு ஓடினர். மறுநாட்காலையில் அலைவாய்க் கோவிலில் அறுமுகச்செவ்வேளைக் காணாது அலக்கணுற்ற அடியார்கள் நெல்லையிற் போந்து வடமலை ஐயனிடம் நிகழ்ந்ததை அறிவித்தார்கள். அவரும் மிகவும் வருத்தமுற்று, செய்வதொன்றறியாது, 'முன்னவனே அருள் புரிந்தால் முடியாத தொன்றுண்டோ' என்று அப்

பெருமானையே சிந்தித்துக் கண்ணீர் வடித்துக்கொண்டிருந்தார். இவ்வாறு அன்பரும் அடியாரும் அடைந்த துயரத்தைக் கண்டு தரியாத அறுமுகப்பெருமான், பிள்ளையன் கனவிலே தோன்றித் தம் இருப்பிடத்தைக் காணுதற்குரிய அடையாளத்தை உணர்த்தி யருளினார். 'காட்டுவித்தால் யார் ஒருவர் காணாதாரே' என்ற திருவாக்கை மனத்திற்கொண்டு, பிள்ளையன் திருச்செந்தூரை அடைந்து, பெருமான் காட்டிய நெறியிலே ஓடத்தைச் செலுத்தி, கருங்கடலிற் கிடந்த மூர்த்தியைக் கரையேற்றி அன்பர்கள் மனத்தைக் குளிர்வித்தார் என்று சரித்திரம் கூறுகின்றது. அக் காலத்திற் பாடிய அருந்தமிழ்க்கண்ணிகள் இன்றும் திருச்செந்தூர் மாசித் திருவிழாவிலே பாடப்படுகின்றன:

" தாரேறு வெறபெனும் - ஈராறு திண்டோளும்
தண்டை சிலம்பணி தண்டா மரைத்தாளும்
ஓராறு சென்னியும் - சண்முக சேவையும்
ஒண்பொற் குழைக்காதும்
போரேறு வேலேந்து - செங்கையும் கண்டன்பர்
போற்று முருகரே மாமால் மருகரே
காரேறு தண்டலை - சூழும் செழுந்தமிழ்க்
காவை வடமலை யப்பன் தொழுதிட

—இப்போது தேவரீர் எழுந்தருளின தெல்லோர்க்கும் நல்லகாலம்—
(பல்லவி)

என்று வென்றிமாலைக் கவிராயர் பாடிய இசைப்பாட்டு, முருகனைப் பிள்ளையன் மண்டபத்திற்கு அழைத்து

வரும்பொழுது இன்றும் பாடப்படுகின்றது. கடலினின்று அறுமுகப் பெருமான் கரையேற்றப்பட்ட செய்தியை அறிவிக்கின்ற சிலாசாசனமும் திருச்செந்தூர்ப் பிள்ளையன் மண்டபத்தில் உண்டு.

இங்ஙனம், அறுமுகப்பெருமானுக்குச் சேவை செய்த வடமலை ஐயனைக் குறித்து வழங்கும் மற்றொரு செய்தியும் அறியத்தக்கதாகும். ஆலயத்தினின்றும் அறுமுகக்கடவுளைக் கள்வர்கள் கவர்ந்து சென்றார்கள் என்று அறிந்தபொழுது, வடமலை ஐயன் அறுமுகத் திருவுருவம் ஒன்று அப்பொழுதே வார்த்து வரும்படி ஆணைசெய்தார் என்றும், அப் பணி தலைமேற்கொண்ட சிற்பிகள் இரவு பகலாக முயன்று, திருவுருவம் அமைத்து, அதனை நெல்லையினின்றும் திருச்செந்தூருக்குச் செல்லும் சாலையின் வழியாக எடுத்துச் சென்றார்களென்றும், மூன்றுமைல் தூரம் சென்ற அளவில் கருங்கடலினின்றும் அறுமுகப் பெருமான் கரை யேற்றப்பட்ட செய்தியை அறிந்து மேற்செல்லாமல் அங்கே தங்கினார்களென்றும், முருகன் தங்கிய காரணத்தால் அவ்விடம் முருகன் குறிச்சி[1] என்று பெயர்பெற்றதென்றும் முதியோர் கூறுவர். இங்ஙனம் முருகன் குறிச்சியில் தங்கிய அறுமுகப் பெருமான், இப்பொழுது பாளையங்கோட்டையின் கீழ்பாலுள்ள சிவாலயத்தில் அமர்ந்துள்ளாரென்று சொல்லப்படுகின்றது.

---

[1] முருகன் குறிச்சி பாளையங்கோட்டையின் மேல்பால் உள்ளது.

## வேலும் வில்லும்

திருச்செந்தூர் முருகனுக்குத் தொண்டுசெய்து கட்டளையும் திருவிழாவும் சிறப்புற வகுத்தமைத்த வடமலை ஐயன் காலத்திற்குப் பின்பு பாஞ்சாலங் குறிச்சியில் சிறந்த வீரன் ஒருவன் தோன்றினான். ஆங்கில வர்த்தகக் கம்பெனியாருக்கு அல்லல் விளைத்த தென்னாட்டுப் பாளையக்காரருள் தலைசிறந்தவன் அவனே. கட்டப்பொம்மன் என்பது அவன் பெயர். அளவிறந்த வீரம் வாய்ந்த பொம்மன் திருச்செந்தூர் அறுமுகப் பெருமானிடம் கரையிலாக் காதல் உடையவனாக விளங்கினான்; திருச்செந்தூரில் புதிதாக மண்டபம் ஒன்று அமைத்து, மாசித் திருவிழாவின் ஏழாம் திருநாளாக நடைபெறுகின்ற பிள்ளையன் விழாவை மிகச் சிறப்பாக அங்கு நடத்த ஏற்பாடு செய்வானாயினான். நெடுங்காலமாக நடந்துவந்த வழக்கத்திற்கு மாறாகப் பிள்ளையன் மண்டபத்திற் சேரவேண்டிய பெருமானைப் பொம்மன் தன் புதுமண்டபத்துக்குக் கொண்டுசெல்லக் கருதினான் என்றறிந்த அன்பர்கள் ஆறாத்துயரமடைந்தனர்; ஆயினும் கட்டப்பொம்மன் கருத்துக்கு மாறாக ஏதும் சொல்ல அஞ்சி வாயடங்கி நெஞ்சம் குமுறி நின்றார்கள். பொம்மன் கருத்தறிந்த பிள்ளையன் பாளையத் தலைவனைத் தடுத்தால் பெருங் கலகமும் கொலையும் நிகழுமென்றஞ்சி முருகனை மனமுருகித் துதித்து நெல்லையிலேயே இருந்துவிட்டார். திருச்செந்தூரில் ஏழாம் திருநாள் தொடங்கிற்று. வழக்கம்போல் அறுமுகச் செவ்வேளை ஆலயத்தினின்று அழைத்து வந்தார்கள். கோவிலைச் சூழ்ந்த மணல் மேட்டைக் கடந்து வாகனம்

கீழே இறங்கும்பொழுது ஒரு சுழல்காற்று வேகமாக எழுந்தது; மண்ணையும் மணலையும் வாரி இறைத்து எல்லோர் கண்ணையும் மறைத்தது. பெருமாரியும் அதைத் தொடர்ந்து பெய்யத் தலைப்பட்டது. காற்றின் வேகத்திற்கு ஆற்றாது, பொம்மன் சேவகர்கள் அங்குமிங்கும் சிதறி ஓடினார்கள். ஆறுமுக மூர்த்தியைத் தாங்கி வந்த அடியார்கள் செயலற்று, கால்சென்ற வழியே சென்று இறைவனை ஓரிடத்தில் இறக்கினார்கள். ஒருநாழிகை கழிந்தபின்பு காற்றின் வேகம் குறைந்தது; மழையும் நின்றது. கட்டப்பொம்மன் அறுமுகக் கடவுளை நாடி ஓடிவந்தான்; அன்பரும் அடியாரும் கண்மாரிபொழிந்து நிற்க, மண்மாரி எழுப்பிய முருகப் பெருமான் வழக்கம்போல் பிள்ளையன் மண்டபத்தில் வீற்றிருக்கக் கண்டான்; அன்பினால் உள்ளம் கரைந்து உருகினான். "அந்தோ! பாவியேன் அரும்பிழை செய்தேன்; ஆசையின் வசப்பட்டு மோசம் போனேன்; பிள்ளையன் மண்டபத்தில் சேர்தற்குரிய பெருமானைப் பிறிதொரு மண்டபத்திற் கொண்டு சேர்க்கக் கருதியது பெரும்பிழையன்றோ? முன்னாளில் கடலாடிகள் கவர்ந்து சென்ற மூர்த்தியைக் கடலினின்றும் மீட்டுத் தந்த வடமலை ஐயனது பெருங்குலத்தில் உதித்த அன்பர்க்குப் பிழைசெய்தவன் ஆயினேன்" என்று மனமார உணர்ந்து, வருந்தி நெல்லையினின்றும் பிள்ளையனை வரவழைத்து, உரிய முறையில் அவர்களை எதிர்கொண்டு வணங்கி, பிழைபொறுக்குமாறு வேண்டினான். பொம்மன் செயல்கண்டு விம்மிதம் உற்ற பிள்ளையன்,

அவனோடு சென்று அறுமுகனுக்குச் செய்தற்குரிய சிறப்பெல்லாம் ஆர்வத்துடன் செய்து திருவருள் பெற்றார்.[1]

முருகன்பெருமை கூறும் தமிழ்நூல்கள் பல வுண்டு. அவற்றுள் பழமையும் செம்மையும் வாய்ந்தது திருமுருகாற்றுப் படையே என்று அறிந்தோர் கூறுவர். பத்துப் பாட்டு என்னும் பழந்தமிழ்த் தொகை நூலில் முதற்பாட்டாக இலங்கும் சீர்மை வாய்ந்தது முருகாற்றுப்படை என்றால் அதன் பெருமைக்கு வேறு சான்றும் வேண்டுமோ ? முருகப்பெருமானது திருவருளைப் பெற்றான் ஒருவன், அவரருளைப்பெற ஆசையுற்று

---

[1]இதற்குச் சான்றாக இற்றைக்கு எழுபதாண்டுகளுக்கு முன்னே பாடப்பெற்ற சில கவிகள் காணப்படுகின்றன:

"சிட்டர் போற்றிய செந்திலா னடிதினம் மறவாக்
கட்டப் பொம்மன்பாஞ் சாலமாங் குறிச்சியைக் காப்போன்
மட்டி லாஅறு முகனைத்த னதுமண்ட பத்தில்
இட்ட மாக்கொடு வரமுனுள் நினைந்தன னிப்பால் ;"

"ஆவ தாகிய எல்லை யி லறுமுக னருளால்
மேவு மின்மழை பொழிந்தன யாவரும் வியப்பத்
தேவ தேவனும் வடமலை யப்பனுர் செய்த
பூவு லாவுமண் டபத்தில்முன் போலவே புகுந்தான்."

இப் பாடல்களால், சுமார் 150-ஆண்டுகளுக்கு முன்னர், செந்திலம்பதியில் முருகப்பெருமான் தன் அடியவர்க்காக நிகழ்த்திய அற்புதம் ஒன்று நன்றாக அறியப்படும். கட்டப்பொம்மனால் தடையுறாக் கட்டளை இன்றும் முருகன் திருவருளால் பிள்ளையன் மரபினரால் முறையாக நடத்தப்பெற்று வருகின்றது.

வந்தடைந்த மற்றொருவனுக்கு வழி காட்டும் முறை யிலே திருமுருகாற்றுப்படை அமைந்திருக்கின்றது. "சேவற் கொடியோனாகிய முருகனது சேவடி படரும் செம்மை சான்ற உள்ளம் உன்பால் உளதாயின், அப் பெருமான் அமர்ந்திருக்கும் திருப்பதிகளைக் கூறுகின் றேன் கேள்" என்று அருள்பெற்றவன் மற்றவனை வழிப்படுத்துகின்றான்: "முருகப்பெருமான் மதுரை யம்பதியின் குடபாலமைந்த திருப்பரங்குன்றத்தில் கோயில் கொண்டிருப்பார்; உலகம் புகழும் திருச் சீரலைவாய் என்னும் திருச்செந்தூரிலே திகழ்வார்; திருஆவினன்குடி என்னும் பழனிப்பதியில் அமர்ந்திருப்; பார்; திருவேரகம் என்னும் சீரகத்தில் சிறந்திருப்பார்; பழமுதிர் சோலை என்னும் பழம்பதியிலும் அழகுற விளங்குவார். இன்னும், அப் பெருமான் குறிஞ்சி நிலத்திற்குரிய இறைவன் ஆதலின், குன்றுதோறும் நின்று நிலவுவார். இப் பதிகளில் சிறந்து தோன்றும் முருகன் பரம்பொருளின் தோற்றமாதலின், பொது வாக எல்லா இடங்களிலும் பாலில் நெய்போல் பரந்து நிற்பார்;

'காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்'

மற்றைய இடங்களிலும் மன்னியிருப்பார்.

"அப் பெருமானை வழிபடும்முறைகளும் பலவாகும். குறிஞ்சி நிலத்தில் வாழும் குறவர்கள், குன்றின்மீது கோயில் அமைத்து, கோடுமுழக்கி, கொடுமணி அடித்து,

குறிஞ்சிப்பாட்டிசைத்து, நறும்புகை எடுத்து, குருதி அளைந்த செந்தினை பரப்பி வழிபடுவார்கள். அருமறை பயின்ற அந்தணர்கள், உச்சிமேற் கரங்குவித்து, ஆறெழுத்தால் அமைந்த அருமறை பாடி, விரையுறு நறுமலரால் அருச்சனை செய்து வழிபடுவார்கள். இன்னும், 'கற்றோர் யாவரும் அறியா அறிவினரும், கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையரும்' ஆகிய நற்றவ முனிவர்கள் ஞானத்தால் அப் பெருமானை வழிபடுவார்கள். இங்ஙனம் கற்றாரும் மற்றாரும் செய்யும் அன்பார்ந்த வழிபாட்டை முருகன் மனமுவந்து ஏற்று அருள் புரிவார். ஆதலின் நீயும் அப் பெருமானை மனமார நினைந்து, வாயார வாழ்த்தி நிற்பாயாயின் உனக்கும் அவர் அருள் கிடைக்கும் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. முருகன் கோவிலிற் போந்து, நீ அறிந்தமறைமொழிகளை மனமாரச் சொல்லி, 'ஐயனே! மனவாக்குக் கெட்டாத மெய்யனே! உன்னை ஏழையேன் என்சொல்லி ஏத்துகேன்?'

'நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்
நின்னடி யுள்ளி வந்தனென்'

என்று தொழுது நிற்பாயாயின் முருகப் பெருமான் தம் வீரக்கோலத்தை உள்ளடக்கி, இயற்கையான இள நலம் காட்டுவார்; புன்னகை பூத்த முகத்தினராய், 'அஞ்சேல்' என்று அருள் செய்வார்; இன்னருள் பாலிப்பார்; நின் பிறவிப் பெரும் பிணியை மாற்றுவார். ஆதலால், அப் பெருமானை அடைதற்குரிய பெரு நெறியை அறிந்து வழிபடுவாயாக" என்ற வகையில் திருமுருகாற்றுப்படை அமைந்திருக்கின்றது.

இத் தன்மை வாய்ந்த முருகன் குன்றக் குறவர் மனையிலே வாழ்ந்த வள்ளி என்னும் வஞ்சியைக் காதலித்து. அவள் தேனூறு சொல்லுக்கு வாயூறி நின்ற நிலையும், தினைப்புலம் காத்து நின்ற வள்ளியின் முன்னே, கிழக்கோலம் புனைந்து தோன்றி அம் மங்கை தன் செங்கையால் அளித்த தேனும் தினைமாவும் அருந்தி மகிழ்ந்த செய்கையும், பின்பு, என்றும் உள தாய முருக நலங்காட்டி மணந்துகொண்ட மாண்பும், இன்பச் சுவை நிரம்பிய நாடகமாகத் தொன்று தொட்டுத் தமிழ் நாட்டில் நடைபெற்றுவருகின்றன.

ஆகவே, கற்றார்க்கும் கல்லார்க்கும் களிப்பருளும் களிப்பாய் இலங்கும் பெருமான் முருகனே. கலியுக வரதராய்க் காட்சிதரும் கடவுள் முருகனே. ஈசனார் மனங்குளிர மறைப் பொருளைக் கொஞ்சித் தமிழாற் பகர்ந்த குரவன் முருகனே. செந்தமிழ்க் கழகத்தில் தந்தையோடு இனிதமர்ந்து தமிழ் வளர்த்த புலவன் முருகனே. இத் தகைய கந்தக் கடவுளின் பெருமையைச் சங்கத் தமிழிலே பாடினார் நக்கீரர்; சந்தத் தமிழிலமைத்துப் பாடினார் அருணகிரிநாதர். அவர் திருவாய்மலர்ந்தருளிய திருப்புகழ், தமிழ் நாடெங்கும் பரவிவருகின்றது. சந்தக்கவியால் விளையும் செந்தமிழின்பம் எங்கும் பொங்கித் ததும்பிப் பூரணமாய் நிற்கின்றது. கடற்கரை யாண்டியாகிய மூலபண்டாரம், செந்திலம்பதிலே திருவருட் செல்வத்தை வாரி வழங்குகின்றார். அப் பெருமானது அணிதிகழ் கோயிலில் இன்று நிகழும் அஷ்டபந்தன கும்பாபிஷேகத்தை நாம் அனைவரும் கண்குளிரக் கண்டு இஷ்டசித்தி எய்துவோமாக!

## முருகன் தோற்றம்

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவரும் துதிக்க நின்ற இராறுதோள் போற்றி, காஞ்சி
மாவடி வைகும் செவ்வேள்[1] மலரடி போற்றி, அன்னான்
சேவலும் மயிலும் போற்றி, திருக்கைவேல் போற்றி போற்றி.

அருவமும் உருவும் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகிக்
கருணைகூர் முகங்கள் ஆறும், கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்(கு) உதித்தனன், உலகம் உய்ய.

மறைகளின் முடிவால், வாக்கால், மனத்தினால் அளக்கொ ணாமல்
நிறைவுடன் யாண்டு மாகி நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக வுருவாய்த் தோன்றி அருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதில் வீற்றிருந் தருளி னானே.

— *கந்த புராணம்*

## முருகன் பேரும் சீரும்

[2]ஈங்கனம் நமது கண்ணின் எய்திய குமரன், கங்கை
தாங்கினள் கொண்டு சென்று சரவணத் திடுத லாலே
காங்கேயன் எனப்பேர் பெற்றான், காமர்பூஞ் சரவ ணத்தின்
பாங்கரில் வருத லாலே சரவண பவன்என் றானான்.

தாயென [3]ஆரல் போந்து தனங்கொள்பால் அருத்த லாலே
ஏயதோர் கார்த்தி கேயன் என்றொரு தொல்பேர் பெற்றான்
சேயவன் வடிவம் ஆறும் திரட்டிநீ[4] ஒன்றாய்ச் செய்தாய்
ஆயத னாலே கந்தன் ஆமெனும் நாமம் பெற்றான்.

---

1 *மாவடி வைகும் செவ்வேள் - காஞ்சிபுரம் ஏகாம்பரேஸ்வரர் கோவிலில் மாமரத்தடியிலுள்ள முருகன்.*

2 *சிவபெருமான் உமையம்மையாரிடம் கூறுகின்றார்.*

3 *ஆரல் - கார்த்திகை.*

4 *நீ என்றது உமாதேவியை.*

## முருகன் பெருமை

ஆதலின் நமது சக்தி அறுமுகன், அவனும் யாமும்
பேதகம் அன்றால், நம்போற் பிரிவிலன் யாண்டும் நின்றான்
ஏதமில் குழவி போல்வான், யாவையும் உணர்ந்தான் சீரும்
போதமும் அழிவில் வீடும் போற்றினர்க்(கு)அருள வல்லான்.

— *கந்தபுராணம்*

## திருமால் புகழுரை

காலமாய்க் கால மின்றி, கருமமாய்க் கருமம் இன்றி
கோலமாய்க் கோல மின்றி, குணங்களாய்க் குணங்கள் இன்றி
ஞாலமாய் ஞால மின்றி, அநாதியாய் நங்கட் கெல்லாம்
மூலமாய் இருந்த வள்ளல் மூவிரு முகங்கொண் டுற்றான்.

பொன்னுரு அமைந்த[1] கஞ்சப் புங்கவ னாகி நல்கும்
என்னுரு[2] வாகிக் காக்கும், ஈசன்போல் இறுதி செய்யும்
மின்னுரு வென்ன யார்க்கும் வெளிப்படை போலும், அன்னான்
தன்னுரு மறைக ளாலும் சாற்றுதற் கரிய தன்றே.

சூரனே முதலோர் தம்மை இமைப்பினில் தொலைக்க உன்னின்
மூரலால் அடுவன், கொண்ட முனிவினால் அடுவன், வாய்மைச்
சீரினால் அடுவன், நாட்டச் செய்கையால் அடுவன், என்றால்
நேரிலா முதல்வன் வன்மை யாவரே நிகழ்த்தற் பாலார்.

— *கந்தபுராணம்*

## ஆறுமுகக் கோலம்

மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம் : ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்தினி தொழுகிக்
காதலின் உவந்து வரங்கொடுத் தன்றே : ஒருமுகம்

---

1 *கஞ்சப்புங்கவன் - பிரமதேவன்.*
2 *என்னுரு என்றது திருமால் வடிவம்.*

இத் தன்மை வாய்ந்த முருகன் குன்றக் குறவர் மனையிலே வாழ்ந்த வள்ளி என்னும் வஞ்சியைக் காதலித்து, அவள் தேனூறு சொல்லுக்கு வாயூறி நின்ற நிலையும், தினைப்புலம் காத்து நின்ற வள்ளியின் முன்னே, கிழக்கோலம் புனைந்து தோன்றி அம் மங்கை தன் செங்கையால் அளித்த தேனும் தினைமாவும் அருந்தி மகிழ்ந்த செய்கையும், பின்பு, என்றும் உள தாய முருக நலங்காட்டி மணந்துகொண்ட மாண்பும், இன்பச் சுவை நிரம்பிய நாடகமாகத் தொன்றுதொட்டுத் தமிழ் நாட்டில் நடைபெற்றுவருகின்றன.

ஆகவே, கற்றார்க்கும் கல்லார்க்கும் களிப்பருளும் களிப்பாய் இலங்கும் பெருமான் முருகனே. கலியுக வரதராய்க் காட்சிதரும் கடவுள் முருகனே. ஈசனார் மனங்குளிர மறைப் பொருளைக் கொஞ்சித் தமிழாற் பகர்ந்த குரவன் முருகனே. செந்தமிழ்க் கழகத்தில் தந்தையோடு இனிதமர்ந்து தமிழ் வளர்த்த புலவன் முருகனே. இத் தகைய கந்தக் கடவுளின் பெருமையைச் சங்கத் தமிழிலே பாடினார் நக்கீரர்; சந்தத் தமிழிலமைத்துப் பாடினார் அருணகிரிநாதர். அவர் திருவாய்மலர்ந்தருளிய திருப்புகழ், தமிழ் நாடெங்கும் பரவிவருகின்றது. சந்தக்கவியால் விளையும் செந்தமிழின்பம் எங்கும் பொங்கித் ததும்பிப் பூரணமாய் நிற்கின்றது. கடற்கரை யாண்டியாகிய மூலபண்டாரம், செந்திலம்பதிலே திருவருட் செல்வத்தை வாரி வழங்குகின்றார். அப் பெருமானது அணிதிகழ் கோயிலில் இன்று நிகழும் அஷ்டபந்தன கும்பாபிஷேகத்தை நாம் அனைவரும் கண்குளிரக் கண்டு இஷ்டசித்தி எய்துவோமாக!

## வேலும் வில்லும்

மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே : ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே : ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே : ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுகப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே.

*— திருமுருகாற்றுப்படை*

வெஃவசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூர னைத்தடிந்து
தெவ்வருயிர் சிந்தும் திருமுகமும் - எஃவுயிர்க்கும்
ஊழ்வினையை மாற்றி உலவாத பேரின்ப
வாழ்வுதரும் செய்ய மலர்முகமும் - சூழ்வோர்

வடிக்கும் பழமறைகள் ஆகமங்கள் யாவும்
முடிக்கும் கமல முகமும் - விடுத்தகலாப்
பாச இருள்துரந்து பல்கதிரிற் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமும் - நேசமுடன்

போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும்
மோக மளிக்கும் முகமதியும் - தாகமுடன்
வந்தடியிற் சேர்ந்தோர் மகிழ வரம்பலவும்
தந்தருளும் தெய்வமுகத் தாமரையும்.

*—கந்தர் கலிவெண்பா*

## வேலின் பெருமை

சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை வேல் அன்றே
பாரிரும் பௌவத்தின்[1] உள்புக்குப் பண்டொருநாள்
சூர்மா[2] தடிந்த சுடர்இலைய வெள்வேலே.

அணிமுகங்கள் ஓராறும் ஈராறு கையும்
இணையின்றித் தானுடையான் ஏந்தியவேல் அன்றே
பிணிமுக[3]மேற் கொண்டவுணர் பீடழியும் வண்ணம்
மணிவிசும்பிற் கோன்[4]ஏத்த மாற[5]ட்ட வெள்வேலே.

சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மார் அறுவர்
திருமுலைப்பால் உண்டான் திருக்கைவேல் அன்றே
வருதிகிரி[6]கோல் அவுணன்[7] மார்பம் பிளந்து
குருகு பெயர்க்குன்றம்[8] கொன்ற நெடுவேலே.

— *சிலப்பதிகாரம்*

வீரவேல், தாரைவேல், விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல், செவ்வேள் திருக்கைவேல் - வாரி
குளித்தவேல், கொற்றவேல், சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை.

— *திருமுருகாற்றுப்படை*

## முருகன் அருள்

நாள்என் செயும்,வினை தான்என்செ யும்,எனை நாடிவந்த
கோள்என் செயும்,கொடுங் கூற்றென்செ யும்,கும ரேசர்இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

---

1 *பௌவம் - கடல்.* 2 *சூர்மா - சூரனை மாமரம்.* 3 *பிணி முகம் - மயில்; முருகனுக்குரிய யானையுமாம்.* 4 *விசும்பிற் கோன் - இந்திரன்.* 5 *மாறு - பகை.* 6 *திகிரி - மலை.* 7 *அவுணன் - தாரகாசுரன்.* 8 *குருகு பெயர்க்குன்றம் - கிரவுஞ்ச மலை.*

சேந்தனை, கந்தனை, செங்கோட்டு வெற்பனை, செஞ்சுடர்வேல்
வேந்தனை, செந்தமிழ் நூல்விரித் தோனை, விளங்குவள்ளி
காந்தனை, கந்தக் கடம்பனை, கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போதும் மறவா தவர்க்கொரு தாழ்வில்லையே.

மைவரும் கண்டத்தர் மைந்த,கந் தாஎன்று வாழ்த்தும்இந்தக்
கைவரும் தொண்டன்றி மற்றறி யேன்,கற்ற கல்வியும்போய்ப்
பைவரும் கேளும் பதியும் கதறப் பழகிநிற்கும்
ஐவரும் கைவிட்டு மெய்விடும் போதுஉன் அடைக்கலமே.

— *கந்தர் அலங்காரம்*

## சென்னைக் கந்தகோட்டத்து முருகன்

நீருண்டு, பொழிகின்ற காருண்டு, விளைகின்ற
நிலனுண்டு, பலனும் உண்டு,
நிதியுண்டு, மதியுண்டு, கதிகொண்ட நெறியுண்டு
நிற்கின்ற நிலையும் உண்டு,

ஊருண்டு, பேருண்டு, மணியுண்டு, பணியுண்டு,
உடையுண்டு, கொடையும் உண்டு,
உண்டுண்டு மகிழவே உணவுண்டு, சாந்தமுறும்
உளமுண்டு, வளமும் உண்டு,

தேருண்டு, கரியுண்டு, பரியுண்டு, மற்றுள்ள
செல்வங்கள் யாவும் உண்டு,
தேனுண்டு வண்டுறுக டம்பணியும் நின்பதத்
தியானமுண் டாயில் அரசே !

தாருண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே !
தண்முகத் துய்யமணி ! உண்முகச் சைவமணி !
சண்முகத் தெய்வ மணியே !

— *திருவருட்பா*

## திருத்தணிகை முருகன்

அடுத்தே வருத்தும் துயர்க்கடலு
அறியா தந்தோ விழுந்திட்டேன்
எடுத்தே விடுவார் தமைக்காணேன்
எந்தாய் எளியேன் என்செய்கேன்
கடுத்தேர் கண்டத் தெம்மான்தன்
கண்ணே தருமக் கடலேஎன்
செடித்தீர் தணிகை மலைப்பொருளே
தேனே ஞானச் செழுஞ்சுடரே.

*— திருவருட்பா*

## முருகா வருக

பேரா தரிக்கும் அடியவர்தம்
பிறப்பை ஒழித்துப் பெருவாழ்வும்
பேறும் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமான் என்னும் பேராளா

சேரா நிருதர் குலகலகா
சேவற் கொடியாய், திருச்செந்தூர்த்
தேவா, தேவர் சிறைமீட்ட
செல்வா என்றுன் திருமுகத்தைப்

பாரா மகிழ்ந்து முலைத்தாயர்
பரவிப் புகழ்ந்து விருப்புடன்அப்
பாவா வாஎன் றுனைப்போற்றிப்
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்

வாரா திருக்க வழக்குண்டோ
வடிவேல் முருகா வருகவே
வளரும் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

*— திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்*

களத்தே புகுந்து கத்காட்டும்
கண்ணே வருக, மெய்ஞ்ஞானக்
கரும்பே வருக, கருணைபொழி
காரே வருக, ஆனந்தப்

பெருக்கே வருக, யாங்கள்பெறும்
பேறே வருக, மறைசொல்கிளிப்
பிள்ளாய் வருக, பிறக்குதெய்வப்
பெம்மான் வருக, குறமடந்தை

தருக்கே வருக, மிடியகற்றும்
தருவே வருக, மன்பதைக்கோர்
தஞ்சே வருக, எமையளிக்கும்
தாயே வருக, பவப்பிணிக்கு

மருந்தே வருக, சமரபுரி[1]
வாழ்வே வருக வருகவே
மறையின் சிரமெய்ப் பொருளான
வள்ளல் வருக வருகவே.

— *திருப்போரூர்ப் பிள்ளைத்தமிழ்*

## வாழ்த்து

ஆறிரு தடந்தோள் வாழ்க, அறுமுகம் வாழ்க, வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க, குக்குடம் வாழ்க, செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க, யானைதன் அணங்கு வாழ்க,
மாறிலா வள்ளி வாழ்க, வாழ்கசீர் அடியா ரெல்லாம்.

— *கந்தபுராணம்*

1 *சமரபுரி - திருப்போரூர் ; தொண்டைநாட்டில் உள்ளது.*

# கந்தர் அலங்காரம்

அலங்காரம் என்றால் எல்லோருக்கும் ஆனந்தம். அன்பின் வழியே நிகழும் அலங்காரம் சிறந்த இன்பம் பயக்கும். குழந்தையை அலங்கரித்து இன்புறுவாள் தாய். காதலியை அலங்கரித்துக் காண்பான் காதலன். கவிதையை அலங்கரித்துக் களிப்புறுவான் கவிஞன். ஆண்டவனை அலங்கரித்து ஆனந்தக்கூத்தாடுவான் பக்தன்.

இந்த வகையிலே கந்தப்பெருமானைச் செந்தமிழால் அலங்கரித்த கவிஞர் பலர். சங்கத்தமிழால் அப் பெருமானை அலங்கரித்தார் நக்கீரர்; சந்தத் தமிழால் அலங்கரித்தார் அருணகிரியார். திருப்புகழ் என்னும் சந்தத் தமிழ்மாலை அணிந்த பின்னரும் ஆராத அன்பினால் அலங்காரம் ஒன்று செய்தார் அருணகிரியார். அதுவே கற்றவர் போற்றும் கந்தர் அலங்காரம்.

கந்தவேள் மகிழ்ந்து உறையும் மலைகளுள் ஒன்று, கொங்குநாட்டுத் திருச்செங்கோடு. அக்குறிஞ்சிப் பதியிலுள்ள முருகனை அலங்கரிக்கின்றார் அருணகிரியார் :

"மாலோன் மருகனை மன்றுடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியில்
சேலார் வயற்பொழில் செங்கோ டனைச்சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத்தில னே அந்த நான்முகனே"

என்று பாடுகின்றார்; "செங்கோட்டில் வாழும் முருகன் திருமாலின் மருகன்; தில்லை மன்றிலே திருநடம் புரியும் சிவனார் திருமகன்; தேவர்க்கெல்லாம் மேலான தேவன்; ஞானவடிவாய நாதன். அப் பெருமானைக் காணக் கண் ஆயிரம் இருந்தாலும் போதாவே! நாலாயிரம் கண்கள் வேண்டுமே! என்னைப் படைத்த நான்முகன் அவற்றைக் கொடுத்தானில்லையே!" என்று அங்கலாய்க்கின்றார்.

என்றும் சீரிளமைத் திறம் குன்றாத அழகன் முருகப் பெருமான். அவன் அழகை இருகண்ணால் முகந்து பருக முடியாமல் அலமருகின்றார் அருணகிரியார். பேரழகைக்காணும் அன்பர்கள் இவ்வாறு பேதுறுவர் என்பதைக் கவியரசர்களாகிய கம்பரும் சேக்கிழாரும் நன்கு எடுத்துக்காட்டுகின்றார்கள். மிதிலைமாநகரின் வீதியிலே மணமகனாகிய மணிவண்ணன் செல்கின்றான். வீதியின் இருமருங்கும் நிறைந்து நின்ற மாதர் அவன் கட்டழகை இருகண்ணால் முற்றும் காண முடியாமல் தவிக்கின்றார். இப் பேரழகனைச் சீதைதான் எப்படிக் காணப்போகின்றாள் என்று சிந்தித்து நின்றார் சிலர். ஆயிரங்கண் இருந்தாலன்றி அஞ்சன மேனியானை முற்றும் அறியமுடியாதுஎன்று கருதினாள் ஒருமங்கை. "நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரம் நயனம்

வேண்டும்'' என்று அக் கருத்தைப் பாடுகின்றார் கம்பர். இது மிதிலைக் காட்சி.

மற்றொரு திருமணம் புத்தூரிலே நிகழ்ந்தது. மண மகன் சிவநேயச் செல்வராகிய சுந்தரர். அவர் பெயருக் கேற்ற பேரழகுடையவர்; மணக்கோலத்தில் வருகிறார். அவர் அழகைக் காண்பதற்கு, 'ஆயிரங்கண் இருந்தா லும் போதா; எண்ணிலாத கண்கள் வேண்டும்' என்று கருதுகின்றார் இள நங்கையர். "கண்கள் எண்ணிலாத வேண்டும் இக் காளையைக் காண என்பார்'' என்பது சேக்கிழார் கவிதை. எனவே, இனியபொருளைக் காணக் கண்ணாயிரமும் அதற்கு மேலும் வேண்டுவது அழகி லுள்ள ஆசைக்கோர் அறிகுறியாகும். இந்த வகையில் செங்கோட்டில் உள்ள செம்மைசான்ற அழகனைக்கண்டு தொழுவதற்கு நான்முகனாகிய பிரமன் தன் ஒருமுகத் திற்கு ஓர் ஆயிரமாகக் கணக்கிட்டு நாலாயிரங்கண்கள் தந்தானில்லையே என்று வருந்துகின்றார் அருணகிரியார். காணக்கண் போதாது என்றால் போகட்டும்; வாழ்த்த வாயுண்டு என்று அலங்காரமாகப் பாடுகின்றார்.

> "கருமான் மருகனைச் செம்மான் மகளைக் களவுகொண்டு
> வருமா குலவனைச் சேவற்கைக் கோளனை வானமுய்யப்
> பொருமா வினைச்செற்ற போர்வேலனைக் கன்னிப் பூகமுடன்
> தருமா மருவுசெங் கோடனை வாழ்த்துகை சாலநன்றே''

என்பது ஓர் அலங்காரப் பாட்டு. சாதிப் பெயர்களா கிய கருமான், செம்மான் முதலியவற்றை முருகப் பெருமானோடு இணைத்துள்ள சதுரப்பாடு நம் உள்ளத் தைக் கவர்கின்றது. 'கருமான் என்பவன் இரும்படிக்

கும் கொல்லன்; அவனுக்கு எப்படி முருகன் மருகனு வான் ?" என்று திகைக்கின்றேம். அப்போது, கற்ற கல்வி வந்து கைகொடுக்கின்றது. கருமான் மருகன் என்ற தொடர் மொழியைக் கருமால் மருகன் என்று பிரித்துவிட்டால் எல்லையற்ற இன்பம் பிறக்கும். 'கரு மால் என்பவன் திருமாலே. அவன் மருகனே முருகன்' என்று ஆனந்தம் அடைகின்றேம்.

இனி, கருமானை அடுத்துச் செம்மான் வருகின்றான். கருமானின் பின் செம்மான் வருவது அலங்காரந் தான் என்று எண்ணி அகமகிழ்கின்றேம். ஆயினும், செருப்புத்தைக்கும் செம்மானேடு சேயோனுகிய முருக னுக்கு என்ன உறவுண்டு? செம்மான் மகளைக் களவாடிய கள்வன் என்று சொன்னதன் கருத்தென்னை?

"செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்"

என்று மற்றேரிடத்தும் அருணகிரியார் பாடுகின்றாரே! என்று சிந்திக்கும் பொழுது உண்மை புலனுகின்றது. செம்மையான மான்வயிற்றுப் பிறந்த வள்ளியைக் களவு முறையிற் கவர்ந்தவன் கந்தவேள் அன்றோ என்று உணர்ந்து இன்புறுகின்றேம்.

இன்னும் இரண்டு சாதிப்பெயர்கள் அப் பாட்டிலே அமைந்துள்ளன. மாகுலவன் எனபது ஒன்று; கைக் கோளன் என்பது மற்றென்று. மலையிலே வேட்டை யாடுபவன் மாகுலவன். அப் பெயர் எங்ஙனம் முருக னுக்குப் பொருந்தும் என்று எண்ணிப் பார்க்கின்ற

பொழுது அருணகிரியார் அமைத்த அலங்காரம் நம் கருத்திலே இலங்குகின்றது. மலைப்புதரில் மறைந்து நின்று பறவை பிடிக்கும் மாகுலவனைப்போல், வேங்கை மரத்தில் மறைந்து நின்று வள்ளியின் கரம்பிடித்த முருகன் செயல் அச் சொல்லால் விளங்குகின்றது. மேலும், முருகன் பெரிய இடத்துப் பிள்ளை என்ற பொருளும் மாகுலவன் என்ற பதத்தால் பெறப்படு கின்றதன்றோ? இறைவன் திருமகனாய், திருமாலின் மருமகனாய், ஒருகை முகன் தம்பியாய் உள்ள முருகன் மாகுலவன் (மா-சிறந்த; குலவன்-குலத்தைச் சேர்ந் தவன்) என்பதில் ஐயமுண்டோ?.

இனி, கைக்கோளன் என்ற பெயர் நெசவுத் தொழில் செய்பவனைக் குறிக்கும். ஆயினும் சேவற் கைக்கோளன் என்று அருணகிரியார் சிறப்பித்தமையால் 'சேவற்கொடியைக் கையிலேயுடைய முருகன்' என்று உணர்ந்து சிறந்த இன்பம் அடைகின்றோம். பிறப்பும் இறப்பும் அற்ற பெருமானைக் கருமாறனோடும், செம்மா னோடும், மாகுலவனோடும், கைக்கோளனோடும் இணைத் துப் பாடிய அலங்காரப்பாட்டின் சுவை அன்பர் உள்ளத்தை அள்ளுவதாகும்.

இத் தகைய முருகப்பெருமானிடம் ஒருவரம் வேண்டுகின்றார் அருணகிரியார்

"பாலே யனைய மொழியார்தம் இன்பத்தைப் பற்றிஎன்றும்
மாலே கொண்டுய்யும் வகையறி யேன்மலர்த் தாள்தருவாய்
காலே மிகவுண்டு காலேயிலாத கணபணத்தின்
மேலே துயில்கொள்ளும் மாலோன் மருகசெவ் வேலவனே"

என்று பாடுகின்றார்; "அரவணையிற் பள்ளி கொள்ளுந் திருமால் மருகனே! தையலார் மையலிலே தாழ்ந்து, உய்யும்வகை யறியாது உழல்கின்ற என்னை உன் திருவடியிற் சேர்த்து அருளவேண்டும்" என்று விண்ணப்பம் செய்கின்றார். இக் கவியிலே திருமாலுடைய அரவணையைக் குறிக்கும் மொழிகளில் அலங்காரம் இலங்குகின்றது. ஆயிரம் தலையுடைய அரவத்தைக் கணபணம் என்ற சொல்லாற் குறிக்கின்றார் அருணகிரியார். காலே மிக உண்டு, காலே யில்லாதது அக் கணபணம் என்கின்றார். கால் உண்டு, கால் இல்லை என்று கூறுவது முரண்பாடாகத் தோன்றுகின்றதே எனத் திகைக்கின்றோம். ஆயினும், சிறிது ஊன்றிச் சிந்திக்கும்பொழுது அச் சொல்லின் நயம் புலனாகின்றது. கால் என்பதற்குக் காற்று என்ற பொருளும் உண்டு; பாதம் என்ற பொருளும் உண்டு. இவ்விரு வேறு பொருளிலும் கால் என்ற சொல் ஆளப்பட்டிருக்கின்றது. காற்றை அருந்தி, கால் இல்லாமையால் உடம்பால் நகர்ந்து செல்லும் இயல்புடைய பாம்பின்மீது பள்ளி கொள்ளும் திருமால் என்பது கருத்து.

இத் தகைய அலங்காரம் தமிழ்க்கவிதையின் சிறப்பு. அதன் சுவையறியும் செந்தமிழ்ச் செல்வத்தைக் கந்தப்பெருமான் அருளாற் பெற்ற அறிஞர்தம் பெருமை சொல்லவும் அரிதே.

---

# கம்பரும் கச்சியப்பரும்

## இருவகை அரசு

**நல்லரசும் வல்லரசும்**

நல்லரசும் வல்லரசும் இவ் வுலகில் எந் நாளும் உண்டு. நல்லரசு அறநெறியிற் சென்று நெடுங்காலம் நிற்கும்; வல்லரசு மறநெறியில் முனைந்து நிலைகுலைந்து அழியும். படைத்திறம் படைத்த வல்லரசுகள் வீழ்ந்து பட்ட வரலாற்றைப் பழங்காவியங்களிற் காணலாம். அரக்கர் கோமானாகிய இராவணனும், அசுரர் வேந்தனாகிய சூரனும் வரம் பெற்றுயர்ந்த வல்லரசர்; ஆயினும் ஈரமற்ற நெஞ்சினர்; வீரமே விளைத்துத் திளைத்தவர். இலங்கையில் இராவணன் நிறுவிய அரசு இராமனது வில்லால் அழிந்தது; வீரமகேந்திரத்தில் சூரன் அமைத்த அரசு முருகனது வேலால் முறிந்தது. இலங்கையழிந்த கதையைக் கம்பர் எழுதிய இராமாயணத்திலும், வீரமகேந்திரம் வீழ்ந்த வரலாற்றைக் கச்சியப்பர் இயற்றிய கந்தபுராணத்திலும் விரிவாகக் காணலாம். இரு கதைகளின் போக்கும்,

கவிகளின் வாக்கும், ஒற்றுமையுடையனவாகத் தோற்று கின்றன.

இலங்கைமா நகரில் அரசுவீற்றிருந்த இராவணன் நெடுந்தவம் புரிந்தான்; அதன் பயனாகப் பெருவரம் பெற்றான்; வரத்தாலும் வலிமையாலும் செருக்குற்றுத் தேவரையும் மூவரையும் வென்றான். மாநில மன்னர் அவன் படைத்திறங் கண்டு அஞ்சி ஒடுங்கி அடிபணிந்தார்கள். இத் தகைய வீரமன்னன், கும்பகருணன் முதலாய தம்பியரோடும், மேகநாதன் முதலாய மைந்தரோடும் இலங்கையிற் சிறந்து வாழ்ந்தான். வானவர் அந் நாட்டில் வாயடங்கிப் பணி செய்தனர். எங்கும் அறம் தளர்ந்தது; பாவம் வளர்ந்தது.

**இலங்கைமா நகரம்**

இராவணனைப்போலவே சூரனும் பெருந்தவம் இயற்றினான்; அண்டங்கள் பலவற்றை ஆளும் வரம் பெற்றான்; விண்ணுலகின்மீது படையெடுத்து, வானவரைப் பிடித்து, வீரமகேந்திரத்தில் சிறை வைத்தான்; சிங்கமுகன் முதலாய தம்பியரோடும், பானுகோபன் முதலாய மைந்தரோடும் மன்னர் மன்னனாக விளங்கினான்.

**வீரமகேந்திரம்**

இவ் வுலகில் மறம் முருகி அறம் வாடும்பொழுது இறைவன் திருவுருக்கொண்டு தோன்றி, மறத்தினை யறுத்து, அறத்தினை நிலைநிறுத்துவான் என்பது ஆன்றோர் கொள்கை. அதற்கேற்ப அரர்கர்கோன் செய்த கொடுமையால் இராமன் அவதரித்தான்;

அசுரர்கோன் இழைத்த தீமையால் முருகன் தோன்று வாளுயினன். அறமே உருவாய சீதையைச் சிறையினின்று மீட்பதற்கு இராமனது விற்படை எழுந்தது; சயந்தன் முதலிய வானவரைச் சிறை மீட்பதற்கு முருகனது வேற்படை எழுந்தது. இங்ஙனம் வில்லும் வேலும் அறத்திற்குத் துணையாக நின்று மறத்தினை அறுத்த சரித்திரம் இரு காவியங்களிலும் விளக்கப்படுகின்றது.

**வில்லும் வேலும்**

## இரு தங்கையர்

அவ் வல்லரசர் இருவருக்கும் வாய்த்த தங்கையரே அவர் அழிந்தொழிய வழிதேடுவாராயினர். சூர்ப்பணகை, இலங்கை வேந்தன் தங்கை; அசமுகி, சூரன் தங்கை. இருவரும் கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்னும் கொள்கை யுடையவர்; மனம் சென்றவாறெல்லாம் சென்று மையலிலே திளைத்தவர்.

**சூர்ப்பணகையும் அசமுகியும்**

"தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டு"க் கானகம் போந்த இராமன் கோதாவிரியாற்றின் அருகே நின்ற அழகிய பஞ்சவடிச் சோலையில் ஒரு பர்ணசாலையமைப்பித்து அங்கே தங்கியிருந்தான். அச் சாலையில் அழகெலாம் ஒருங்கே வாய்ந்த சீதையைக் கண்டாள் சூர்ப்பணகை; அம் மங்கையை இலங்கை வேந்தனிடம் கொண்டு சேர்க்கக் கருதினள்; இராமன்

**மூக்கறுபட்ட தங்கை**

வெளியே சென்றிருந்த வேளைபார்த்துப் பர்ணசாலையிற் புகுந்து, பதறி நின்ற சீதையைப் பற்றி யெடுத்துப் பறக்கலுற்ருள், அந் நிலையில் சாலையின் புறத்தே காவல் புரிந்த இலக்குவன் வெளிப்பட்டான்; கரவாடும் வன்னெஞ்சக் கள்ளியின் கூந்தலைப் பற்றி யிழுத்து, மூக்கை வாளாலறுத்து மங்கையை விடுவித்தான்.

மூக்கறுபட்ட சூர்ப்பணகையின் மனத்தில் சீற்றம் முறுகி யெழுந்தது. இலங்கையில் வாழ்ந்த உற்ருர் உறவினரை ஓலமிட்டு அவள் அழைத்தாள்: "வெள்ளி மாமலை யசைத்தமன்னவா! என் மூக்கறுத்த பகைவனை நோக்காயா? திசையானை மருப்பொசித்த இசையாளா! யானடைந்த வசைதீர்க்க வாராயா?" என்று அலறிஞள்; "கரனிருந்து அரசாளும் கானகத்தில் ஒரு நரன் புகுந்து என்னை நலிவதா" என்று கதறிஞள்; மாற்ருர் கூற்ருய மேகநாதனை நினைத்தாள்; "வானவர்கோன் பீடழித்த மருகாவோ! யானடைந்த பழியினைப் பாராயோ" என்று அரற்றிஞள்; இவ்வாறு வருந்தி யழைத்தும் உறவினர் எவரும் வாராமை கண்டு வெறுப் புற்ருள்; அக் கானகத்தில் வாழ்ந்த கரனிடம் போந்து, தன் குறையை முறையிட்டாள். கொடிய சேனையோடு கரன் முதலாய வீரர்கள் கதித்தெழுந்து, இராமனுடன் கடும்போர் புரிந்தனர்; உயிர் துறந்தனர்.

அது கண்ட சூர்ப்பணகை, அழுத கண்ணும் பெருகிய மூக்குமாய் இராவணனிடம் போந்தாள்; திகைத்து நின்ற தமையனை நோக்கி, மூக்கிழந்த வரலாற்றைக் கூறலுற்ருள்; "ஐயனே, பஞ்சவடிச்

சோலையில் ஒரு பாவையைக் கண்டேன். அழகின் கொழுந்தெனத் திகழ்ந்த அம் மங்கை உனக்கே உரியவள் என்று கருதினேன்; அவளை இங்கே எடுத்துவர முயன்றேன்; அப்போது மறைவிலிருந்த இராமன் தம்பி, என் தலையைப் பற்றியிழுத்து, மூக்கறுத்து, மானபங்கம் செய்துவிட்டான். என் வாழ்வு இன்றே முடிந்தது. உன்னிடம் இதைச் சொன்னபின் உயிர் துறக்கக் கருதினேன்" என்றாள்.

தங்கைக்கு நேர்ந்த அவமானத்தைக் கண்டு மனம் வருந்திய இராவணன், அவள் சொல்லிய மங்கையின் அங்க நலன்களை இறையளவும் மறந்தானல்லன்; அவ் வழகியை அடைதற்குரிய வழியை நாடினான்; மாறுகோலம் புனைந்து பஞ்சவடிச் சாலையிற் போந்து, தனியாக இருந்த சீதையைக் கவர்ந்தெடுத்து அசோகவனத்தில் சிறை வைத்தான்.

**சீதையின் சிறைவாசம்**

சிறைப்பட்ட சீதை, ஊணுறக்கமற்று வாடி மயங்கினாள்; புகையடைந்த ஓவியம்போல் பொலிவிழந்தாள்; ஆயினும், நாயகன் வருவான் என்று நம்பி, அரக்கர்கோன் செய்த சிறுமையெல்லாம் பொறுத்து, உயிர் தரித்திருந்தாள். இங்ஙனம் சிறையிருந்து வருந்திய சீதை வடித்த கண்ணீர், அறப்படையை இலங்கைக்கு வரவழைத்தது.

இனி, சூரன் கதையைப் பார்ப்போம்: இந்திரன் சூரனது கொடுமைக்கு அஞ்சி, பொன்னாடு துறந்து, பொன்னி நாட்டை யடைந்தான்; சிவ

மணங் கமழும் சீகாழிப் பதியில் ஒரு பூஞ்சோலை யமைத்து, அங்கு இந்திரையோடு தங்கியிருந்தான். சூரன் ஆட்சியில் ஈனமுற்று வருந்திய வானவர், இந்திரனிடம் போந்து, தம் குறையை முறையிட்டார்கள். வானவர் துயரங் கண்டு தரியாத வேந்தன், கயிலையங்கிரி வாசனாகிய ஈசனிடம் ஓலமிடப் புறப்பட்டான்; தனித்திருந்த இந்திரையை மாசாத்தன் காவலில் ஒப்புவித்து, விடைபெற்றுச் சென்றான்.

கையறுபட்ட தங்கை

பூஞ்சோலையில் தனித்திருந்த தேவியைச் சூரன் தங்கையாகிய அசமுகி கண்ணுற்றாள்; அவளைச் சூரனிடம் கொண்டுசேர்க்க விரும்பினாள். அவள் பேசிய தீயமொழிகளைக் கேட்ட தேவி அஞ்சி நடுங்கினாள்;

"பழியும் பார்த்திலை, படிஇ கழ்ந்திடும்
மொழியும் பார்த்திலை, இறையும் பார்த்திலை
வழியும் பார்த்திலை, வருவ பார்த்திலை
இழியும் தீயசொல் இயம்பற் பாலையோ"[1]

---

1 இச்செய்யுள், கம்பராமாயணம் மாயாசனகப் படலத்திலுள்ள
"பழியிது பாவம் என்று பார்க்கிலை, பகரத் தக்க
மொழியிவை அல்ல என்ப துணர்கிலை, முறைமை நோக்காய்
கிழிகிலை நெஞ்சம் வஞ்சக் கிளையொடும் இன்று காறும்
அழிகிலை என்றபோ துஎன் கற்பெனும் அறந்தான்
என்னாம்"
என்ற செய்யுளோடு ஒப்புநோக்கத் தக்கது.

என்று நயந்துரைத்தாள். இங்ஙனம் மாறுபட்டுப் பேசிய மாதை மறித்தெடுத்துச் செல்லத் துணிந்தாள் அசமுகி. அந்நிலையில் பூஞ்சோலையின் புறத்தே நின்று காவல் புரிந்த மாசாத்தனின் சேவகனாகிய மாகாளன் வெளிப்பட்டான்; வான மங்கையைத் தொட்டிழுத்த அசமுகியின் கையை வாளால் துணித்திட்டான்.

கையற்ற அசமுகி கதறி அழுதாள்; வீரமகேந்திரத்தில் வீற்றிருந்த சூரனை நினைத்தாள்; "மன்னவோ, மன்னவோ! யான் பட்ட மானத்தை மனங்கொள்ளாயோ? மாற்றார் திறங்குறைத்த முன்னவா! என் கரங்குறைத்த பகைவனைக் காணாயோ?" என்று கதறினாள்; மற்றும் மகேந்திரத்தில் வாழ்ந்த உற்றார் உறவினரையெல்லாம் ஒருவர்பின் ஒருவராக நினைந்து ஓலமிட்டாள்; "கதிரவனைச் சிறை செய்த மருகாவோ, மருகாவோ! யான் பட்ட கையறவு காணாயோ? மாயவன் நேமியைப் பொன்னாரமெனப் பூண்ட தாரகனே! இன்று மாயாப் பழிபூண்டு நின்றாயே! வாசவன் ஏறிய வாரணத்தை ஒரு கையால் வீசியெறிந்த சிங்கமுக வீரனே! அவ் வானவன் விடுத்த சேவகனால் வந்தடைந்த வசையினைப் பாராயோ?" என்று முறையிட்டாள்; உற்றார் எவரும் வாராமை கண்டு, அற்ற கரத்தோடு அண்ணன் இருந்த இடம் போந்தாள்.

சூரன் வீற்றிருந்த சபையிற் புகுந்து, அசமுகி தனக்கு நேர்ந்த சிறுமையை எடுத்துரைக்கத் தொடங்கினாள். "ஐயனே, நின் ஆணைக்கடங்காது, கரந்துறையும்

இந்திரையைக் காவிரி நாட்டிலே கண்டேன் ; நறுமணங் கமழும் பூஞ்சோலையில் தனித்திருந்த அம் மாதை என்னோடு வரும்படி அழைத்தேன்; அவள் மறுத்தமையால், உன்னிடம் அவளை எடுத்துவர முனைந்தேன். அப்பொழுது வாசவன் ஏவலால், சோலையைக் காத்து நின்ற காவலன், என்கரத்தை வாளால் அறுத்திட்டான். கரமற்ற எனக்கு இனி உறவாவார் யாருமில்லை. ஊனமுற்றோர் உயிர்வாழ்ந்திருத்தல் ஈனமன்றோ? மானமழிந்த பின் வாழலாகுமோ? ஆதலால், ஆவி துறக்கத் துணிந்தேன்" என்று கண்ணீர் சொரிந்தாள்.

தனக்கு நலம் புரியக் கருதிய தங்கை கையற்றாள் என்று அறிந்து மனங்கொதித்த சூரன், காவிரி நாட்டில் கரந்து வாழ்ந்த வான மங்கையைக் கவர்ந்துவர விரும்பினான். அவன் கருத்தறிந்த பானுகோபன், தந்தையை வேண்டித் தானே பழிக்குப் பழிவாங்கப் புறப்பட்டான்; காவிரிநாட்டில் அசமுகி காட்டிய பூஞ்சோலையில் இந்திரையைக் காணாது, விண்ணுலகின்மீது படையெடுத்தான். இந்திரன் மைந்தனாகிய சயந்தன், வானவர் படைக்குத் தலைவனாய்ப் பானுகோபனை எதிர்த்தான். பொன்னாட்டில் நிகழ்ந்த போரில் அசுரர் வென்றார்; வானவர் தோற்றார். தன் கையகப்பட்ட சயந்தனையும் தேவரையும் சூரனிடம் கொண்டு சென்றான் பானுகோபன். மைந்தன் திறங் கண்டு மனமகிழ்ந்த மன்னவன், மாற்றாரனைவரையும் சிறைக்கோட்டத்தில் அடைத்து வைத்தான்.

**வானவர் சிறைவாசம்**

சிறையில் அகப்பட்ட சயந்தன் வாடிவருந்தினன்; இழந்த நிலையினை எண்ணி எண்ணி ஏங்கினன்; வானவர்க்கு நேர்ந்த வசையினை நினைந்து சாம்பினன்; தேவர்க்கும் மூவர்க்கும் முதலாய ஈசன் இரங்கி அருள் செய்தாலன்றிச் சிறையினின்றும் விடுபடுமாறில்லை என்றுணர்ந்து, நாற்றிசையும் நோக்கிக் கண்ணீர் வடித்தான். சிறையிருந்த சயந்தனும் வானவரும் அல்லற்பட்டு ஆற்ருது அழுத கண்ணீர், வீரமகேந்திரத்திற்கு வேற்படையை வரவழைத்தது.

## இருபெருந் தூதர்

இராம தூதனாகிய அனுமன் சீதை சிறையிருந்த இலங்கையை அடைந்தான். அந் நகரம் வீரமா நகரமாய் விளங்கிற்று. ஆடவர் என்று பேர் படைத்தார் அனைவரும் வீரக் கழலணிந்த காலர்; கல்லினும் வலிய தோளர்; படைத்தழும் பேறிய கையர்; கனலுமிழும் கண்ணர். இத் தகைய வீரரைக் கண்ட மாருதி,

> " கழலிலாக் காலும்கால அயிலிலாக் கையும் காந்தும்
> அழலிலாக் கண்ணு மில்லா ஆடவ ரில்லை " [1]

என்று வியந்து புகழ்ந்தான். போர்வெறி பிடித்த அரக்கர் வீரமே பேசித் திளைத்தனர்; வீரமே விளைக்க விரும்பினர்; போரிலேவிழுப்புண்படாத நாளெல்லாம் வீணாய்க் கழிந்த நாளென்று கருதினர். செல்வம் மலிந்த இலங்கைமா நகரில் பசியால் நலிந்தவரும், பிணியால் உழன்றவரும் இல்லை. அரக்கர் அனைவரும் கவலையற்று

**அநுமன் கண்ட இலங்கை**

[1] கம்ப ராமாயணம், சுந்தர காண்டம், ஊர்தேடு: 36.

ஆடிப்பாடி அகமகிழ்ந்திருந்தார்கள் ; கள்ளுண்டு களித்திருந்தார்கள்.

அவ் வீரமா நகரில் வானவர் வணங்கிப் பணி செய்வாராயினர். இலங்கையர்கோன் ஆதரித்து வளர்த்த அசோக வனத்தைக் கண்ணிணைக் காக்கும் இமைபோல் காத்துநின்றார் சிலர்; அரக்கர்கோன் மாளிகையில் அஞ்சி ஒடுங்கிக் குற்றேவல் செய்தார் சிலர். அக்காட்சியைக் கண்ட இராமதூதன், இராவணன் இயற்றிய தவத்தின் பெருமையை மனமாரப் போற்றினான் ; அப்பால் அசோகவனத்தில் சிறையிருந்த சீதையைக் கண்டு அவள் சோகத்தை ஒருவாறு மாற்றினான்.

அநுமன் அரக்கரை அச்சுறுத்தக் கருதி அசோக வனத்தை அழித்தான்; அதுகண்டு சீற்றமுற்று எழுந்த அரக்கர் சேனையைச் சிதைத்தான் ; பஞ்ச சேனாபதியரைப் பருந்துக்கு விருந்தாக்கினான் ; அரசிளங் குமரனாய அக்கனை அரைசாந்துபோல் தரையில் தேய்த்துக் கொன்றான் ; இறுதியில், மேகநாதன் வீசிய பாசத்தில் அகப்பட்டு இராவணன் முன்னே போந்து நின்றான் ;

**இலங்கை வேந்தனும் அநுமனும்**

குறும்பிழைத்த குரங்கு அகப்பட்டதென்று இறுமாந்திருந்த வேந்தன் செவிகளில் தன்னையாட்கொண்ட நாயகன் பெருமையை நன்றாக எடுத்துரைத்தான்;

“ஆதியும் அந்தமுமில்லாத இறைவனே அயோத்திமா நகரில் அரசகுமாரனாகத் தோன்றினான். அப்பாலுக்கு அப்பாலாய் அமைந்த ஆதி பகவனே கால்

தரைதோய நின்றான்; கண்ணுக்கும் எளியன் ஆனான்" என்னும் உண்மையை இனிது உணர்த்தினான்.

ஆயினும், மாருதி யுரைத்த வாய்மை, செருக்குற்றிருந்த இராவணன் செவிகளில் ஏறவில்லை. அறநெறி தவறிய அரசனைநோக்கி, "உன் செல்வம் சிதையாதிருக்கவேண்டுமாயின், சீதையை விடுக; உன் ஆவியை ஒரு பொருளாகப் போற்றுவாயாயின், மன்னவன் தேவியை விடுக" என்று மாருதி உறுதியாக உரைத்தான்.

இனி, முருகனுடைய தூதனைப் பார்ப்போம்: முருக தூதனாய வீரவாகு மகேந்திரத்தை அடைந்தான். அந் நகரின் படைத்திறம் அவன் கருத்தைக் கவர்ந்தது. அசுரர் அனைவரும் வரத்தினிற் பெரியர்; மாயவன்மையிற் பெரியர்; உரத்தினிற் பெரியர்; ஊக்கத்திற் பெரியர். வீரமகேந்திரத்தில்,

**வீரவாகு கண்ட மகேந்திரம்**

நலிந்த ஆடவரில்லை; நரம்பெழுந்து உலர்ந்தவரும், நரைதிரை யுடையவரும் அந் நகரில் இல்லை; வறுமையால் வாடியவர் எவரும் அங்கில்லை. அதுகண்ட வீரவாகு சூரனியற்றிய தவத்தின் பெருமையை வியந்து புகழ்ந்தான். இத் தகைய வீரமாநகரில் வானவர் வணங்கி ஏவல்புரிந்தனர். நாள்தோறும் கடலிற் போந்து வளமார்ந்த மீன்களைப் பிடித்துத் தலையிற் சுமந்துவரும் பணியைச் சூரன் அவர்க்கு விதித்திருந்தான். மீனெடுத்துவரும் ஈனத்தொழிலை வானவர் வெறுத்தனரேனும், சூரனது ஆணையை மறுத்தற்கஞ்சி, வழுவாது பணியாற்றிவந்

தனர். இவற்றை யெல்லாம் கண்ணுற்ற வீரவாகு, சயந்தன் சிறையிருந்த இடத்திற்கு சென்றும் அவனைத் தேற்றினன்.

மகேந்திர நகரை முற்றும் சுற்றிப் பார்த்து, அதன் வீரத்திறத்தினை நன்குணர்ந்த வீரவாகு, சூரன் முன்னே சென்றான்; விண்ணினின்றும் இழிந்த பொற்பீடத்திலமர்ந்து சீற்றங்கொண்ட சூரனிடம் முருகன் பெருமையை அறிவிக்கத் தலைப்பட்டான்; "தன்னிகரில்லாத் தலைவனே முருகனாய்த்தோன்றினன்; அண்டங்களனைத்தையும் படைத்தும் காத்தும் கரந்தும் விளையாடும் பரமனே அறுமுகக் கோலங் கொண்டு அழகிய பாலனாய் வந்தான்" என்னும் உண்மையை எடுத்துரைத்தான்.

சூரனும் வீரவாகுவும்

நெறி தவறிய சூரன், அச் செம்மொழியைச் செவியில் ஏற்றா னல்லன். ஆயினும், பெருமிதமுற்ற பேதையாய சூரனுக்குக் கட்டுரை கூறுதல் கடன் எனக் கருதினன் முருகதூதன்; "நின் கிளையோடு நீ நெடிது வாழ விரும்புவாயாயின், இப்பொழுதே வானவரைச் சிறையினின்றும் விடுக; அறுமுகச் செவ்வேள் அடி பணிக" என்று கட்டுரை கூறினன்.

## இரு வல்லரசர் சபை

அநுமன் இலங்கையை எரிமடுத்தான்; தன்னைப் பற்றப்போந்த அரக்க வீரரை எற்றியறைந்தான்; மீண்டும் கடல் கடந்து இராமனிடம் போந்தான். அநுமன்

வைத்த தீயால் இலங்கை முற்றும் புகை மண்டிற்று ; நெடுமாடங்கள் நெருப்பினால் வெந்து நீறாயின; அரக்கர் எண்ணிறந்தவர் அழிந்தனர் ; இராவணன் அரண் மனையும் எரிந்தொழிந்தது. ஒருவாறு நெருப்பின் வேகம் தணிந்ததும், மன்னவன் ஆணையால் முன்னிலும் அழகுற மாடமாளிகைகள் கட்டி முடிந்தன. புதிய மாளிகையில் அரக்கர்கோன் சபை கூடிற்று. மந்திரத் தலைவரும், தானைத் தலைவரும், தந்திரத் தலைவரும் வந்திருந்த சபையின் நடுவே ஓர் அரியாசனத்தில் இராவணன் அமர்ந் தான் ; சுற்றுமுற்றும் பார்த்தான்.

**இராவணன் சபை**

அவன் நெஞ்சம் பற்றியெரிந்தது ; மானமும் சீற்றமும் மனத்தில் மாறிமாறி எழுந்தன ; உணர்ச்சி ததும்பப் பேசலுற்றான்: "ஒரு வானரம் வந்து என் வளநகரைச் சுட்டது ; உற்றார் உறவினர் பட்டனர் ; அழுகுரல் எங்கும் பரந்தது. இவ் வலங்கோலத்தினிடையே அரியாசனத்தில் என் உடல் அமர்ந்திருக்கின்றது. மற்றொன்றும் இல்லை என்றாலும் நம் நகரத்தைப் பாழ் செய்த குரங்கைப் பற்றிக் கொணர்ந்தோமா? பழிக்குப் பழி வாங்கினோமா ? அவ் வானரம் இற்றொழிந்தது என்ற சொல்லேனும் பெற்றோமா ? சீர் குலைந்தது ; சிறுமையில் மூழ்கினோம்" என்று கொதித்துக் கூறினான் கொற்றவன்.

அரசன் அமர்ந்தவுடன் எழுந்தான் சேனைகாவலன்; முறுக்காகப் பேசத் தொடங்கினான் : "அரசே, உன் பெருந்திறலுக்காற்றாது தேவரும் அடங்கினர் ; அவர்

தலைவராய மூவரும் ஒதுங்கினர். தானவர் தருக்கிழந்தனர்; இயக்கர் நிலைகுலைந்தனர். இவ்வாறு பல திறத்தாரும் அடங்கிப் பணிசெய்ய அரசு வீற்றிருக்கும் நீ, ஒரு வானரம் வலியதென்று கூறலாகுமோ?" என்றான். படைத்தலைவன் கருத்தை ஆதரித்துப் பேசலுற்றான் மந்திரத்தலைவனாய மகோதரன்: "ஐயனே, பலபல பன்னுதலாற் பயனில்லை. எனக்கு விடைகொடுப்பாயாயின் இப்பொழுதே எழுந்து சென்று, குறும்பு செய்த குரங்கைக் கொன்றொழிப்பேன். அவ்விலங்கை இங்கு அனுப்பிய மானிடரின் உயிர் குடித்து உன் பகைமுடிப்பேன்" என்று துடுக்காகப் பேசினான்.

இங்ஙனம் தானைத் தலைவனும், மந்திரத் தலைவனும், பிறரும் பேசிய வீர மொழிகளால் இலங்கை வேந்தன் உள்ளம் கிளர்ந்து முறுகி நின்றது. அந் நிலையில் எழுந்தான் விபீஷணன்; மன்னவனைக் கைகூப்பி வணங்கினான்; "ஐயனே, இவ் வளநகரம், ஒரு வானரத்தால் அழிந்ததென்று வருந்துகின்றாயே! உண்மையில் அவ்வானரமா இலங்கையை அழித்தது? அசோகவனத்தில் சிறையிருந்து தவம்புரியும் சீதையின் கற்புத்தீயன்றோ இக் கடிநகரைச் சுட்டெரித்தது? அரசே, சீதையைச் சிறையினின்றும் விட்டுவிடு. அந் நங்கையின் நாயகனே உலகநாயகன். அவனே மூவர்க்கும் முதலாய முழுமுதற் பொருள். அருந்தவத்தின் பயனாகப் பேரரசும் பெருந்திருவும் பெற்றாய்; நெடுங்காலம் வாழ்ந்திருக்கும் வரமும் பெற்றாய்; இச் சீரும் சிறப்பும்

நிலைக்கவேண்டு மாயின் சீதையை விட்டருள்வாய்" என்று வேண்டினான்.

வீர வெறி பிடித்த வல்லரசன் செவிகளில் விபீஷணன் சொல் ஏறவில்லை. எதிர்த்துப் பேசிய தம்பியை அவன் ஏளனம் செய்யத் தலைப்பட்டான்; "அப்பா, தம்பீ! உன் மானிடன் திறமையைக் கூறுவேன் கேள்: மிதிலையில் உளுத்துக் கிடந்த வில்லை எடுத்து ஒடித்த வீரன்; வானர நாட்டில் ஓர் ஓட்டை மாமரத்தை அம்பினால் துளைத்த வில்லன்; கூன் விழுந்த ஒரு மாது செய்த சூழ்ச்சியால் அரசிழந்த கொற்றவன்; யான் ஏவிய மாயமான் பின்னே மருண்டு ஓடி, மனையாளைப் பறிகொடுத்த மகிபன். மணிமுடி துறந்தும், மனையாளை இழந்தும், மானமின்றி இன்னும் உயிர் சுமந்து திரியும் மானிடன் வலிமையை வேறு எவர் மதிப்பார்?" என்று இழித்துப் பேசினான்.

அன்றியும், பகைவரது திறமையைப் பாராட்டிய தம்பி, அவரோடு உறவு பூண்டான் என்றும், அவருதவியால், இலங்கையரசைப் பெற ஆசைப்பட்டான் என்றும் இராவணன் குற்றம் சாட்ட முற்பட்டான்; தவறிழைத்த தம்பியை உடனே நாட்டைவிட்டு வெளியேறும்படி பணித்தான். அக் கடுமொழி கேட்ட விபீஷணன், "ஐயனே, உன் நலங்கருதியே இவ்வாறு உரைசெய்தேன். நீ உள்ளதை உள்ளவாறு உணர்ந்தாயல்லை. நின் கருத்துக்கு மாறாகப் பேசத் துணிந்த என் பிழையைப் பொறுத்தருள்க. நீ பணித்தவாறே

போகின்றேன்" என்று இலங்கையை விட்டு அகன்றான்.

முருக தூதனாகிய வீரவாகுவும், மகேந்திர நகரை அழித்தான் ; அசுரர் சேனையைச் சிதைத்தான் ; பிடிக்க வந்த அசுரவீரரை அடித்தொழித்து அப்பாற் போந்தான். மான வீரனாய சூரன், நிகழ்ந்ததறிந்து நெஞ்சங் கொதித்தான். மாளிகையில் மந்திரசபை கூடிற்று. சூரன் பேசலுற்றான் : "முருகதூதனாக வந்த ஒருவனால் இத் திருநகரம் அழிந்தது. அளவிறந்த அசுரசேனை இறந் தொழிந்தது. மாண்டவர் எலும்பு மலையாகக் குவிந்தது.

குருதி வெள்ளம் எங்கும் பெருகிற்று.

**சூரன் சபை** என் ஆணை ஒழிந்தது; உயர்வும் தீர்ந்தது.

இந் நகரிற் போந்து சிறுமை செய்த தூதனைப்பற்றிச் சிறையில் அடைத்தேனா ? செற்றுச் சிறுமை துடைத்தேனா ? வடுப்படுத்தியேனும் விடுத் தேனா ? யாதும் செய்திலேன். வசை வெள்ளத்தில் மூழ்கினேன்" என்று வருந்தியுரைத்தான் சூரன்.

அப்போது. சபையிலிருந்த அமைச்சரும் படைத் தலைவரும் அரசனது மனப்பான்மைக் கேற்றவாறு பேசத் தலைப்பட்டார்கள். அவர்களுள், காலசித்தன் என்பான் எழுந்து, சூரனது வீரப்புகழை விளக்குவானாயினான் : "அண்டர்கள் அடங்கினர். அரக்கர் அஞ்சினர். எண் திசைக் காவலரும் ஏவல் புரிகின்றார். இத் தகைய சூரன் ஆட்சியில் இன்று அசுரர் எளியராம் ; பூதர் வலியராம் : இது கலியின் கோல

மன்றோ" என்று மாற்றாரை ஏளனம் பேசினான். அவன் அமர்ந்தவுடன் சூரன் மகனாய பானுகோபன் எழுந் தான்; மிடுக்காகப் பேசலுற்றான் : "மன்னவா ! இன்றே என்னைப் போகவிடு ; நம் பகைவரை முறித்து, வான வரையு மடித்து, நொடிப்பொழுதில் மீள்வேன்" என்று அறைந்தான்.

இவ்வாறு மந்திர சபையில் எழுந்த வீரமொழிகள், நெருப்பில் நெய் வார்த்தாற்போன்று சூரன் மனத்தில் அமைந்த சீற்றத்திற்கு ஊற்றமளித்தன. அந் நிலையில் அவன் தம்பியாய சிங்கமுகன் எழுந்தான். சூரனை நோக்கி, "ஐயனே, இதுகாறும் அமைச்சரும் பிறரும் வீரமே பேசினர் ; தம் திறமையை விரித்தனர் ; மாற் றார் வலிமையை இகழ்ந்தனர். இவர்களில் ஒருவரும் அறிவுரை பகர்ந்தா ரல்லர். விண்ணவர் நாட்டை நீ வென்று அழித்தபோது வானவரைப் பிடித்துச் சிறை யில் அடைத்தாய். அன்னார் துயரம் இன்னும் தீர்ந்த பாடில்லை. அவரது துன்பத்தைத் துடைப்பதற்காகவே முருகன் தோன்றியுள்ளான் ; அவன் சிவனார் திருமகன் ; ஆதிப் பரம்பொருளின் தோற்றம். ஞானமே வடிவாய முருகன் தன்மையை நாமா பேசவல்லோம் ? புற்றாய், மரமாய் வற்றிக் கிடந்து அருந்தவம் புரியும் முனிவரும் அவனை அறிந்திலர். இத் தகைய பரம்பொருளைப் பகைத்தவர் பிழைப்பரோ ? நீயும் நின் செல்வமும் சுற்றமும் கேடின்றி வாழவேண்டு மாயின் வானவரை இன்றே சிறையினின்று விட்டுவிடுதல் நன்று" என்று வேண்டினான்.

இங்ஙனம், முருகனைப் புகழ்ந்து, வானவரைச் சிறையினின்று விட்டுவிடுமாறு நயந்து பேசிய சிங்க முகனை வெறுத்தான் சூரன். பரம்பொருள் என்று அவன் பாராட்டிய முருகனை ஏளனம் செய்யத் தலைப் பட்டான் : சிங்கனை நோக்கி, "அப்பா, தம்பி ! பாலுண் ணும் பாலனையா பரமன் என்றாய் ? அவன் காற்றில் தள்ளுண்டவன் ; நெருப்பில் சூடுண்டவன் ; கங்கை யாற்றில் தாக்குண்டவன் ; சரவணப் பொய்கையில் அலைப்புண்டவன் ; வேற்றுத் தாயாரிடம் பாலுண்டு விளையாடித் திரிகின்றவன். அந்த நேற்றைப் பாலனையோ பரம்பொருள் என நினைத்தாய்?" என்றான் சூரன்.

அவ்வளவில் அமையாது, சிங்கமுகன்மீது சூரன் குற்றம் சாட்டினான்; "நீ என் உடன் பிறந்தாய் ; உடல் பெருத்தாய் ; நம் குலப்பகைவரை அழிக்க முற்படாது, அவர்க்கு ஆளாயினாய் ; அசுரர் மரபிற்குரிய ஆண்மை இழந்தாய் ; மானந்துறந்தாய் ; குலப் பெருமையை அழிக்கப் பிறந்தாய் ; என் பகையை யானே வென்று முடிப்பேன் ; நீ உன் வழியே போ" என்று வெகுண்டு பேசினான். அவ்வுரை கேட்டு மனம் வருந்திய சிங்கன், " வருவதறியாமல் பேசுகின்றான் மன்னவன் ; அழிந் தொழிய வழி தேடுகின்றான். என்னால் இயன்றமட்டும் அவனைத் திருத்த முயன்றேன். என் உரையை அவன் தன் செவியில் ஏற்றானல்லன். பேதையரைத் திருத்த முயல்பவர் அவரினும் பேதையரே" என்று மனம் நொந்தான்.

## இரு பெரும் போர்

அறப்படைக்கும் மறப்படைக்கும் இலங்கையில் போர் தொடங்கிற்று. முதல் நாள் நிகழ்ந்த போரில் இராவணனே முன்னின்று இராமனை எதிர்த்தான். வீரர் இருவரும், பகல் முழுதும் கடும் போர் புரிந்தனர். இறுதியாக, இலங்கை வேந்தன் முடியிழந்து, படையிழந்து, மானமும் இழந்து, எளியனாய் நின்றான். அந் நிலையில் இராமன் அவனை நோக்கி, "அரக்கனே! உன் பெருஞ் சேனையெல்லாம் அழிந்து ஒழிந்தது. நீயும் வெறுங் கையனாய் நிற்கின்றாய். இப்பொழுதேனும் நீ சிறை வைத்த சீதையை விடுத்து, இலங்கை யரசை அறவோனாகிய விபீஷணனுக்குக் கொடுத்து, உயிர் வாழ விருப்பமோ? அன்றி மேலும் போர் புரிந்து அழிந்தொழிய விருப்பமோ? போர் புரிதலே உன் கருத்தாயின் இன்று போய் உன் படைகளைத் திரட்டிக் கொண்டு நாளை வா" என்றுரைத்தான். அது கேட்ட இராவணன், தலை கவிழ்ந்து, வாயிழந்து தன் அரண் மனையை நோக்கி நடந்தான்.

**இலங்கைப் போர்**

வீரமகேந்திரத்தில் வந்தடைந்த முருகன் சேனையோடு முதல் நாள் போர் புரிந்தான் சூரன் மகனாய பானுகோபன். அன்று நிகழ்ந்த அரும்போரில், மாற்றார் திறமை சூரன் மைந்தனுக்கு நன்றாக விளங்கிற்று. அசுரப்படை யனைத்தையும் பறிகொடுத்து, மானமழிந்தவனாய், பானுகோபன் வாயடங்கி, மனமடங்கி மீண்டான். இரண்டாம் நாள் சூரனுடன் நிகழ்ந்த போரில்

முருகன் விடுத்த திகிரிப்படை அசுரர் சேனையைக் கொன்றுகுவித்தது. சூரனும் தேரிழந்து, வில்லிழந்து, குடையிழந்து, முடியிழந்து தரையிடை நின்றான். அப்போது முருகன் அவனை நோக்கி, "சூரனே! நீ வானவரையும் வாசவன் மைந்தனையும் வன்சிறையில் வைத்தாய். அது தவறு என்று அறிவித்தற்கு உன்னிடம் என் தூதுவனை அனுப்பினேன். அவன் சொல்லிய அறவுரையைச் சிந்தையிற் கொண்டாயல்லை. உன் தம்பியாகிய தாரகனைத் தடிந்த வேல் உன்னையும் கொல்லுதல் ஒருதலை. படையிழந்து நிற்கும் பகைவனை அடுதல் பழியாகும் என்று கருதி உன்னை இன்று போகவிடுகின்றேன். வானவரைச் சிறையினின்றும் விடுவித்தால் உயிர் வாழ்வாய். இன்றேல், என் வேற்படைக்கு இரையாவாய்" என்று உறுதியாக உரைத்தான். சூரன், மறுமொழி யொன்றும் பேச வகையறியானாய், அமர்க்களத்தின்று மறைந்து போய் அரண்மனையை அடைந்தான்.

மகேந்திரப் போர்

## அமர்க்களத்தில் மேகநாதன்

இராவணன் மைந்தனாய மேகநாதன், இலங்கையில் நிகரற்ற வீரன்; வானவரை வென்று வான்புகழ் பெற்றவன்; இந்திரனை வென்று சிறைபிடித்து, இந்திரசித்தன் என்று பெயர் எய்தியவன். வில்லின் செல்வனாய அவ் வீரன் சீற்றமுற்று மாற்றாரைத் தாக்கினான்; எதிரே நின்ற இலக்குவன்மீது தன் கொடிய படைக்கலங்களை ஒன்றன்பின் ஒன்றாக ஏவினான். அவற்றை அவன் எளிதாகத் தடுத்துவிட்டான். எப்படியும் அன்று

பகைவரை வென்றே தீரவேண்டும் என்று கருதிய மேகநாதன், மாயவன் படையை எடுத்து விடுத்தான்.

**மேகநாதன் செய்த போர்**

கண்டோர் மனங்கலங்கச் சென்ற அப் படை, இலக்குவனை வலம்வந்து விலகிப் போயிற்று. அதைக்கண்ட மேகநாதன் மாற்ருர் திறத்தை உள்ளவாறு உணர்ந்தான்; அவரை வெல்ல முடியாதென்று விளக்கமாக அறிந்தான்; வெல்லலாகாத பகையை விலக்கிவிட்டால் நல்லதாகுமே என்று எண்ணினுன்; அந் நிலையில் போர்க்களத்தினின்று மறைந்து இராவண னிடம் போந்தான்; மாற்ருரைக் கொன்று வருவான் என்று மனங்களித்திருந்த மன்னவன் முன்னே, கரங் குவித்து நின்று, "ஐயனே, இன்று நிகழ்ந்த போரில், நெடியவன் படையை ஏவினேன். அது, முன்னின்ற பகைவனை வலம்செய்து போயிற்று. அதனினும் வலிய படை என்பால் உண்டோ? நம் குலம் செய்த பாவத்தாலே கொடும்பழி தேடிக்கொண்டோம். இலக் குவன் இன்னும் சீற்றமுறவில்லை. அவன் சீற்றமுற்ருல் இவ் வுலக மூன்றும் சிதையுமென்று தோன்றுகின்றது" என்று ஒன்றையும் மறையாது எடுத்துரைத்தான். அப்போது, இராவணன் முகத்தில் செற்றம் செறிந்தது. கண்கள் தழலெனச் சிவந்து சுழன்றன. மன்னவனது மனநிலை யறிந்த மேகநாதன், மீண்டும் இறைஞ்சி நின்று "அருமைத் தந்தாய்! இவ்வாறு பேசியதால் நான் போருக்கு அஞ்சினேன் என்று கருதிவிடலாகாது. அச்சத்தால் இவ் வண்ணம் உரைத்தே னல்லேன்;

உன்பால் வைத்த ஆசையால் உரைத்தேன் ; வரம்பெற் றுயர்ந்த நீ நெடுங் காலம் வாழவேண்டும் ; நின்செல்வம் அழியாதிருக்கவேண்டும் என்னும் ஆசையால் இன்னும் ஒன்று கூறத்துணிந்தேன்: சிறைப்படுத்திய சீதையை நீ விடுவாயாயின், மாற்ருர் சீற்றந்தீர்வர் ; நம் நாட்டை விட்டு அகல்வர் ; நாம் செய்த தீமையும் பொறுப்பர். பகை நீங்கி, நீ பண்புற்று வாழ்வாய்" என்ருன்.

அம் மொழி கேட்ட இலங்கை வேந்தன், சிந்தை கலங்கிச் சீற்றந் தலைக்கொண்டான். எதிரே நின்ற மைந்தனை நோக்கி, "பேதாய், அறியாமற் பேசினுய்; நீவென்று வருவாய் என்ரு இப் பகையைத்தேடினேன்? என் தோள்வலியை நம்பியே சீதையை எடுத்துவந்தேன். எடுத்துவந்த மங்கையைக் கொடுத்துவிடுதல் ஈன மன்ருே? அமர்புரிந்து, ஆவியை விடுவேனேயன்றி, மாற்ருன் தேவியை விடுவேனே ? மானமே உயிரினும் பெரிது ; புகழே என் வாழ்வினும் பெரிது; அழியும் தன்மை வாய்ந்த இவ் வுலகில் அழியாது நிற்பது புகழ் ஒன்றே யன்ருே?" என்று வேகமாகப் பேசினுன். அவ் வுரை கேட்ட மேகநாதன், "கேடுவரும் பின்னே மதி கெட்டுவரும் முன்னே" என்னும் பழமொழியின் உண்மையை நன்குணர்ந்தான் ; போர்க்களத்தில் உயிர் துறத்தலே கடன் எனத் தேர்ந்து, மீண்டும் இலக் குவைேடு போர் தொடுத்தான் ; அப்போரில் ஆவி துறந்து அரும்புகழ் பெற்ருன்.

**அமர்க்களத்தில் பானுகோபன்**

மகேந்திரத்தில் மாற்ருர் சேனையைத் தாக்கிய பானுகோபன், தன்னிடமிருந்த படைக்கலங்களை

யெல்லாம் ஏவினான் ; அவையனைத்தும் பயனற்றுப் போகக்கண்ட நிலையில், மயக்கம் விளைக்கும் மாயப் பெரும்படையை விடுத்தான். அப் படை முருகன் சேனையை மயக்கி, வீரர் அனைவரையும் வாரி எடுத்து, நன்னீர்க் கடலில் உய்த்தது. அதையறிந்த முருகன் தன் வேற்படையை ஏவினான். அப் படை விரைந்து போந்து கடலில் மயங்கிக் கிடந்த வீரரை எழுப்பி எடுத்து மீண்டும் போர்களத்திற் சேர்த்தது. அப் புதுமையைக் கண்டான் பானுகோபன். "மாயப்படை இவ்வாறு ஒழிந்தால் வேறு எப் படையால் பகைவரை மாய்ப்பேன்" என்று மனந்தளர்ந்தான் ;

**பானுகோபன் செய்த போர்**

வேற்படை தாங்கிய வீரனை வெல்லுதல் எவ்வாற்றானும் இயலாதென்று சூரனிடம் சென்று உண்மையை அறிவிப்பானாயினான். "அரசே, மனத்திட்பம் வாய்ந்த மாற்றாரை எதிர்த்தால் நான் மனமகிழ்வேன்; வினைத்திட்பம் வாய்ந்த வீரரை எதிர்த்தால் ஊக்கம் அடைவேன் ; இன்று மாயப் பெரும்படையை ஏவினேன். அது மாற்றார் சேனையை மயக்கிக் கருங்கடலில் உய்த்தது. ஆனால், முருகன் விடுத்த வேல் அதனை மீண்டும் கொணர்ந்து விட்டது. அம் முருகனை வெல்வது அரிது. ஆதலால், பகைவர்க்கஞ்சி இங்கு வந்துவிட்டேன் என்று எண்ணிவிட லாகாது. நீ வாழவேண்டும் ; அரசாள வேண்டும் என்பதே என் ஆசை ; அவ் வாசையால் ஒன்று கூறத் துணிந்தேன். வானவரை நீ சிறையினின்றும் விடுவாயாயின், வேலேந்திய முருகன், நம்

நாட்டைவிட்டு அகல்வான்; சீற்றம் தீர்வான்; நம் சீர்மையும் சிறப்பும் நிலைகுலையாமல் நெடுங்காலம் நிற்கும்" என்று கட்டுரை கூறினான்.

அவ்வுரை கேட்ட சூரன் பொங்கி எழுந்தான்; "மைந்தா, என் முன்னின்று என்ன பேசினாய்? வானவரை விட்டேனென்றால், என்னை யாவரே மதிப்பார்? தேவரும் மூவரும் போற்ற மன்னனாய் வீற்றிருக்கும் என்னிலை என்னாகும்? இவ் வுலகம் நிலையற்ற தென்பதை நீ யறியாயோ? இளமையும், செல்வமும், சுற்றமும், மற்று யாவும் முடிந்தே தீரும். அழியாமல் நிற்பது புகழ் ஒன்றே; ஆதலால், ஆவி கொடுத்து அரும் புகழ் பெறுவேனே யன்றி,வானவரை விடுத்து, வசையினுக்கு ஆளாகி வாழமாட்டேன்" என்று உறுதியாகப் பேசினான். தந்தையின் உரை கேட்ட மைந்தன் மனந்தளர்ந்தான்; விதியின் வழியே அவன்மதி சென்றது என்று எண்ணினான்; மாறாகப் பேசிய பிழை பொறுக்குமாறு மன்றாடினான்; மீண்டும் போர்க்களம் போந்தான்; வீரப்போர் புரிந்து வீழ்ந்தான்.

## இராவணன் செய்த இறுதிப்போர்

வீரத்தம்பியரும் மைந்தரும் இறந்தபின்னர், இலங்கைவேந்தன், போர்க்கோலம் புனைந்து எழுந்தான்; வரத்தாலும் திறத்தாலும், அன்று மாற்றாரை அழித்து ஒழிக்கத் துணிந்தான்; விண்ணவர் மருள வெம்போர் விளைத்தான். ஆயினும், எதிரே நின்ற இராமன், பதைப்புற அம்பு தொடுத்துநின்றான். அவன் வில்லினின்று எழுந்த சரமாரி எங்கும் பரந்து

நிறைந்தது. அந் நிலையில் இராவணன் மனத்தில் அமைந்த ஆணவம் சிறிது அகன்றது; மெய்யறிவு சற்றே மிளிர்ந்தது. பகைவனாய் எதிரே நின்ற வீரன் யாவன் என்று அவன் எண்ணத் தலைப்பட்டான்.

> " சிவனோ அல்லன், நான்முகன் அல்லன், திருமாலாம்
> அவனோ அல்லன், என்மெய்வர மெல்லாம் அடுகின்றான்
> தவனோ என்னில் செய்து முடிக்கும் தரனல்லன்
> இவனே யோதான் வேதமுதற்கா ரணன் என்றான்.

" என் முன்னே நிற்கும் பகைவன் மும்மூர்த்திகளில் ஒருவனாய சிவனா யிருக்கலாமோ " என்று சிந்தித்தான்; " இத்துணை வலிமை சிவனுக்கும் இல்லையோ " என்று அக்கருத்தைத் தவிர்த்தான்; " நான்முகன், நாமமும் உருவமும் கரந்து வந்து பொருதானோ" என்று நினைத்தான்; "எளியனாய பிரமனுக்கு என்முன் நிற்கும் ஆற்றலும் உண்டோ " என்று எண்ணி அக்கருத்தையும் தள்ளினான்; இவ் விருவரும் இல்லையாயின், "இவன் திருமாலோ" என்று ஐயுற்றான்; " இவ்வளவு கடுமையாக நெடும்போர் புரியுந்திறம் அவனுக்கும் இல்லை " என்று தெளிந்தான்; மூவரும் இல்லையென்றால், " அவரினும் அருந்தவம் புரிந்த ஒருவனாய் இருப்பானோ " என்று கருதினான்; " எத்தகைய தவம் புரிந்தவனாயினும், என்னினும் பெருந்தவம் இயற்றவல்லவன் ஒருவன் உளனோ? ஆதலால், இவன் தவனும் அல்லன்; பின், யாராயிருத்தல் கூடும்? என் மெய்வர மெல்லாம் சிதைக்கும் இவ் வீரன், முழுமுதற் பொருளாய இறைவன்தானோ? "

1 கம்பராமாயணம், யுத்த., இராவணன் வதை., 135.

என்று எண்ணினான். இங்ஙனம் எண்ணி வியந்து நிற்கையில், மீண்டும் அவன் மனத்தில் ஆணவம் படர்ந்தது. மெய்யறிவு அகன்றது. இயல்பாக உள்ள செருக்கும் இறுமாப்பும் வந்து சேர்ந்தன. "என் பகைவன், எவனே ஆயினுமாகுக ; யான் முன்வைத்த காலைப் பின்வைத்தல் அறியேன் ; அமரே புரிவேன்" என்று அவன் ஆரவாரித்துப் படை தொடுத்தான்.

## சூரன் செய்த இறுதிப் போர்

இவ் வண்ணமே முருகனோடு போர் தொடுத்த சூரனும் கடைசி நாளில் கடும்போர் புரிந்தான். அப் போரின் இடையே, மாலனாய் நின்ற வேலன், பார்க்கு மிட மெங்கும் நீக்கமற நிறைந்து நின்ற அக் காட்சியைக் கண்டான் சூரன் :

"கோலமா மஞ்ஞை தன்னில் குலவிய குமரன் தன்னைப்
பாலனென்றிருந்தேன் அந்நாள் பரிசிவை உணர்ந்தி லேன்யான்
மாலயன் தமக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற மூர்த்தி இம் மூர்த்தியன்றோ"[1]

என்று ஆற்றவும் வியந்து நின்றான்; முருகப் பெருமான்து அழகினைக் கண்ணுற் பருகிக் களிப்புற்றான்; அப் பெருமானைத் 'தாள்களாற் சூழ்தல்வேண்டும்; கைகளால் தொழுதல் வேண்டும் ; நாவினால் துதித்தல் வேண்டும்' என்று ஆசைப்பட்டான். அந் நிலையில் மெய்யறிவு பெயர்ந்தது. மாயை மீண்டும் அவன் அறிவை மறைத்தது. எல்லா வுலகமும் தானேயாகி நின்ற

[1]கந்தபுராணம், யுத்த., சூரன் வதை., 439.

பெருமான், மீண்டும் பாலனாய்த் தோன்றினான். சூரன் செருக்குற்றுப் பின்னும் போர் செய்து வீழ்ந்தான்.

இலங்கை வேந்தனும், மகேந்திர மன்னனும் கண்டோர் வியப்புறக் கடும்போர் புரிந்து பட்டனர். இராவணன் மனைவியாய மண்டோதரியும், சூரன் மனைவியாய பதுமையும் கற்பு நெறி வழுவாமல் கணவனுருடன் சென்றார். வல்லரசுகளை முறித்த வில்லையும் வேலையும் நல்லோர் யாவரும் வாழ்த்தி வழிபடுவாராயினர்.

—

[கம்பர், கச்சியப்பர் ஆகிய இருபெருங் கவிஞர் வாக்கிலுமுள்ள ஒற்றுமைகளைப் பின்வரும் கவிகளிற் காண்க.]

# கம்ப ராமாயணம்

---

## இராவணன் அரசு வீற்றிருத்தல்

நிலையிலா உலகினிடை நிற்பனவும்
நடப்பனவும் நெறியின் ஈந்த
மலரின்மேல் நான்முகற்கும் வகுப்பரிது
நுனிப்பதொரு வரம்பில் ஆற்றல்
உலைவிலா வகையுழந்த தருமமென
நினைந்தவெலாம் உதவுந் தச்சன்
புலனெலாம் தெரிப்பதொரு புனைமணிமண்
டபமதனில் பொலிய மன்னோ. 1

திசையுறு கரிகளைச் செற்றுத் தேவனும்
வசையுறக் கயிலையை மறித்து வானெலாம்
அசையுறப் புரந்தரன் அடர்த்த தோள்களின்
இசையினைத் தும்புரு இசையின் ஏத்தவே. 2

பண்டலங்கு திசைக்களிற்றின் பணைமருப்பின்
இணையொடியப் படர்ந்த பொற்றோள்
விண்டலங்கள் உறவீங்கி ஓங்குதய
மால்வரையின் விளங்க மீதில்
குண்டலங்கள் குலவரையை வலம்வருவான்
இரவிகொழுங் கதிர்சூழ் கற்றை
மண்டலங்கள் பன்னிரண்டும் நாலைந்தாய்ப்
பொலிந்தவென வயங்க மன்னோ. 3

# கந்த புராணம்

## சூரன் அரசு வீற்றிருத்தல்

மீயுயர் கின்ற விண்ணினின் றிழிந்த
விழுமிய மேதினி வரைப்பின்
ஆயிர கோடி கொண்டஅண் டத்தில்
ஆடகப் பித்திகை யவற்றுள்
தீயனவிலக்கி நல்லன எடுத்துத்
திசைமுகத் தவர்கள்செய் தென்ன
ஓய்வற விளங்கு தமனியப் பொதுவென்(று)
ஆயிரம் யோசனை யுறுமே. 1

மாகநல் வேள்வி ஆற்றிய திறனும்
மதிமுடிப் பரன்அருள் அடைந்தே
ஏகிய திறனும், தனதனை முதலா
யாரையும் நிலையழித் தனவும்
சேகுறும் அண்டம் யாவையும் கண்டு
திருவுடன் அரசியற் றியதும்
பூகத நிலையத் தவுணர்கள் பல்லோர்
புடைதனின் முறைமுறை புகழ. 2

ஆனதோர் மன்றத் தரியணை மிசையே
ஆயிர கோடிஅண் டத்தின்
மேல்நிமிர் வடவை அங்கியும் விடமும்
மிசைந்தழி யாநெறி மேவித்
தானவர் பரவக் கூற்றெலாம் ஒன்றாய்த்
தணப்பில்பே ரணிகலம் தயங்க
வான்நிமிர்ந் துற்றால் என்னவெஞ் சூர
மன்னவர் மன்னன்வீற் றிருந்தான். 3

## மூக்கறுபட்ட தங்கை

நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
மூலநா சம்பெற முடிக்கும் மொய்ம்பினாள்
மேலைநாள் உயிரொடும் பிறந்து தான்விளை
காலமோர்ந் துடனுறை கடிய நோயனாள். 4

## மூக்கறுபட்ட முறை

ஊக்கித் தாங்கிவிண் படர்வம்என் றுருத்தெழு வாளை
நூக்கி நொய்தினின் வெய்திழை யேல்,என நுவலா
மூக்கும் காதும்வெம் முரண்மிகு மார்பமும் முறையால்
போக்கிப் போக்கிய சினத்தொடும் புரிகுழல் விட்டான். 5

## சூர்ப்பணகையின் ஓலம்

உரன்நெரிந்து விழஎன்னை உதைத்(து)உருட்டி மூக்கரிந்த
நரன்இருந்து தோள்பார்க்க நான்கிடந்து புலம்புவதோ
கரன்இருந்த வனம்அன்றோ இவைபடவும் கடவேனோ
அரன்இருந்த மலையெடுத்த அண்ணாவோ அண்ணாவோ ! 6

நசையாலே மூக்கிழந்து நாணம்இலா நான்பட்ட
வசையாலே நினதுபுகழ் மாசுண்ட தாகாதோ
திசையானை விசைகலங்கச் செருச்செய்து மருப்பொசித்த
இசையாலே நிறைந்தபுயத்(து) இராவணவோ இராவணவோ ! 7

## கையறுபட்ட தங்கை

மாலுற்றிட வாழ்சூரபன் மாவின்கிளை முழுதும்
மூலத்தொடு முடிவித்திடும் முறையூழ்வினை யென்னச்
சூலத்தினை ஏந்தித்தனி தொடர்துன்முகி யுடனே
ஆலத்தின துருவாம்என ஆங்குற்றனள் அன்றே. 4

## கையறுபட்ட முறை

போகலும் அதனை ஐயன் பொருநரின் தலைவன் பாரா
ஏகுதி போலும் நில்லென் றெய்தியே உடைவாள் வாங்கிச்
சேகுறு மனத்தாள் கூந்தல் செங்கையால் பற்றி ஈர்த்துத்
தோகையைத் தொட்ட கையைத் துணித்தனன் விண்ணோர் துள்ள.

## அசமுகியின் ஓலம்

புரம்குறைத்தும் வலிகுறைத்தும் பொங்கியதொன்
னிலைகுறைத்தும் புரைய ருத
வரம்குறைத்தும் புகழ்குறைத்தும் மறையொழுக்கம்
தனைக்குறைத்தும் மலிசீர்த் தொல்லை
உரம்குறைத்தும் வானவரை ஏவல்கொண்டோம்
என்றிருப்பீர் ஒருவன் போந்(து)என்
கரம்குறைத்த தறியீர்நும் நாசிகுறைத்
தனன்போலும் காண்மின் காண்மின். 6

ஒன்னார்தம் சூழ்ச்சியினால் ஒருமுனிவன்
என்சிறுவர் உயிர்கொண் டுற்றான்
இந்நாளில் அஃதன்றி ஒருவனைக்கொண்டு
எனதுகையும் இழப்பித் தாரே
பின்னாள்இவ் வருத்தமுற நன்றரசு
புரிந்தனையால் பிழைஈ தன்றோ
மன்னாவோ, மன்னாவோ யான்பட்ட
இழிவரவை மதிக்கி லாயோ? 7

கானமதின் இடைஇருவர் காதொடுமூக் குடன்அரிய
மானமதால் பாவியேன் இவண்மடியக் கடவேனோ
தானவரைக் கருவறுத்துச் சதமகனைத் தளையிட்டு
வானவரைப் பணிகொண்ட மருகாவோ ! மருகாவோ ! 8

ஒருகாலத் துலகேழும் உருத்தெரியத் தனுவொன்றால்
திருகாத சினந்திருகித் திசையனைத்தும் செலநூறி
இருகாலிற் புரந்தரனை இருந்தளையின் இடுவித்த
மருகாவோ மானுடவர் வலிகாண வாராயோ ! 8a

மரனேயும் நெடுங்கானில் மறைந்துறையும் தாபதர்கள்
உரனேயோ அடல்அரக்கர் ஓய்வேயோ உற்றெதிர்ந்தார்
அரனேயோ அயனேயோ அரியேயோ எனும்ஆற்றல்
கரனேயோ யான்பட்ட கையறவு காணாயோ ! 9

## இராவணன் சபையில் சூர்ப்பணகையின் முறையீடு

அன்னவன் தன்னை உன்பால் உய்ப்பல்என் றெடுக்க லுற்ற
என்னையவ் விராமன் தம்பி இடைபுகுந் திலங்கு வாளால்
முன்னைமூக் கரிந்து விட்டான் முடிந்ததென் வாழ்வும் உன்னின்
சொன்னபின் உயிரை நீப்பான் துணிந்தனன் என்னச் சொன்னாள்.

## அநுமன் கண்ட இலங்கை

அரக்கர் திறம் :—

காயத்தாற் பெரியர் வீரம் கணக்கிலர் உலகம் கல்லும்
ஆயத்தார் வரத்தின் தன்மை அளவற்றார் அறிதல் தேற்றா
மாயத்தார் நகர்க்கெங் கேனும் வரம்புஉண் டாமே மற்றோர்
தேயத்தார் தேயம் சேறல் தெருவில்ஓர் தெருவிற் சேறல். 11

பிறைசெய்த சீர்உருவக் குழவியுருக்
 கொண்டுறுநாள் பெயர்ந்து வானின்
முறைசெய்த செங்கதிரோன் ஆதபம்மெய்
 தீண்டுதலும் முனைந்து பற்றிச்
சிறைசெய்த மருகாவோ, மருகாவோ
 ஒருவன்எனைச் செங்கை தீண்டிக்
குறைசெய்து போவதுவோ வினவுகிலாய்
 ஈதென்ன கொடுமை தானே. 8

வையொன்று வச்சிரக்கைப் புரந்தரனைத்
 தந்தியொடும் வான்மீச் செல்ல
ஒய்யென்று கரத்தொன்றால் எறிந்தனை வீழ்ந்
 தனன்கிடப்ப உதைத்தாய் என்பர்
மெய்யென்று வியந்திருந்தேன். பட்டிமையோ
 அவன் தூதன் வெகுண்டு வந்தென்
கையொன்று தடிந்தனனே சிங்கமுக
 வீரஇது காண்கி லாயோ ! 9

## சூரன் சபையில் அசமுகியின் முறையீடு

காவல்புரிந்து உலகாளும் அண்ணவோ
 அண்ணவோ கரமற் றேன்காண்
ஏவர்எனக் குறவாவர் ஊனமுற்றோர்
 இருப்பதுவும் இழுக்கே யன்றோ
ஆவிதனை விடுவேன்நான் அதற்குமுனம்
 என்மானம் அடுவ தையோ
பாவியொரு பெண்பிறந்த பயனிதுவோ
 விதிக்கென்பால் பகைமற் றுண்டோ ? 10

## வீரவாகு கண்ட வீரமகேந்திரம்

அசுரர் திறம் :—

வரத்தினிற் பெரியர் மாய வன்மையிற் பெரியர் மொய்ம்பின்
உரத்தினிற் பெரியர் வெம்போர் ஊக்கத்திற் பெரியர் எண்ணில்
சிரத்தினிற் பெரியர் சீற்றச் செய்கையிற் பெரியர் தாங்கும்
கரத்தினிற் பெரியர் யாரும் காலினிற் பெரியர் அம்மா. 11

விற்படை பெரிதென் கோயான் வேற்படை மிகும்என் கோயான்
மற்படை உளதென் கோயான் வாட்படை வலிதென் கோயான்
கற்பணம் தண்டுபிண்டி பாலம்என் றினைய காந்தும்
நற்படை உளதென் கோயான் நாயகற் குரைக்கும் நாளில். 12

மரமடங்கலும் கற்பகம் மனையெலாம் கனகம்
அரம டந்தையர் சிலதியர் அரக்கியர்க் கமரர்
உரம டங்கிவந் துழையராய் உழல்பவர் ஒருவர்
தரம டங்குவ தன்றிது தவம்செய்த தவமால். 13

சிறையிருந்த சீதை :—

ஆவி யந்துகில் புனைவதொன் றன்றிவே றறியாள்
தூவி யன்னம்மென் புனலிடைத் தோய்கிலா மெய்யாள்
தேவு தெண்கடல் அமிழ்துகொண்டு அனங்கவேள் செய்த
ஓவி யம்புகை யுண்டதே ஒக்கின்ற உருவாள். 14

சீதையின் துயரம்: —

வாரா தொழியான் எனும்வண் மையினல்
ஓரா யிரம்கோ டிஇடர்க் குடைவேன்
தீரா ஒருநாள் வலிசே வகனே
நாரா யணனே தனிநா யகனே. 15

அநுமன் இராமன் பெருமை கூறல் :—

அறந்தலை நிறுத்தி வேதம் அருள்சுரந் தமைந்த நீதித்
திறந்தெரிந் துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோர் இடர்துடைத்து ஏக விண்டு
பிறந்தனன் தன்பொற் பாதம் ஏத்துவார் பிறப்ப றுப்பான். 16

மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத் தாய
காலமும் கணக்கும் நீத்த காரணன் கைவில் ஏந்திச்
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும்விட்டு அயோத்தி
வந்தான். 17

வில்லி யற்றுவோர், வாட்படை யியற்றுவோர், வேறும்
எல்லை யில்படை யுள்ளவும் இயற்றுவோர், இகலால்
மல்லி யற்றுவோர், மாயம தியற்றுவோர், மனுவின்
சொல்லி யற்றுவோர் கண்ணுறு புலந்தொறும் தொகுமால். 12

நாடி மேலெழத் தசையிலா துலறியே நரையாய்க்
கோடு பற்றிமுத் தசைந்திடு வோரையும், கூற்ருல்
வீடு வோரையும், பிணியுழப் போரையும், மிடியால்
வாடு வோரையும் கண்டிலம் இதுதவ வலியே. 13

சிறையிருந்த சயந்தன் :—

தேவியல் மரகதம் தெளித்துத் தீட்டிய
ஓவிய உருவம்மா சுண்ட தன்மையான்
ஆவியம் புனலரு தமரும் காவியம்
பூவியல் மென்தொடை புலர்ந்த தேயனுன். 14

சயந்தன் துயரம் :—

நாராய ணனும்அந்த நான்முகனும் நாடரிய
பேராதி யான பெருமான் உயிர்க்கெல்லாம்
ஆராயின் நீயன்றி யாரே துணையாவார்
வாராய் தமியேன் உயிரளிக்க வாராயே. 15

வீரவாகு முருகன் பெருமை கூறல் :—

மண்ண ளந்திடும் மாயனும் வனசமே லவனும்
எண்ண ரும்பகல் தேடியும் காண்கிலா திருந்த
பண்ண வன்நுதல் விழியிடைப் பரஞ்சுடர் உருவாய்
உண்ணி றைந்தபே ரருளினுன் மதலையாய் உதித்தான். 16

முன்ன வர்க்குமுன் னுகுவோர் தமக்கும்முற் பட்டுத்
தன்னை நேரிலா தீசனும் தனிப்பெயர் தாங்கி
இன்னு யிர்க்குயி ராய்,அரு வுருவமாய், எவர்க்கும்
அன்னை தாதையாய் இருந்திடும் பரமனே அவன்காண். 17

ஆத லால்தன் அரும்பெறற் செல்வமும்
ஓது பல்கிளை யும்உயி ரும்பெறச்
சீதை யைத்தரு கென்றெனச் செப்பினான்
சோதி யான்மகன் நிற்கெனச் சொல்லினான். 18

இராவணன் சபை:—*இராவணன் முன்னுரை*

சுட்டது குரங்கு எரி சூறை யாடிடக்
கெட்டது கொடிநகர், கிளையும் நண்பரும்
பட்டனர், பரிபவம் பரந்த தெங்கணும்
இட்டஇவ் அரியணை இருந்த தென்னுடல். 19

மற்றில தாயினும் மலைந்த வானரம்
இற்றில தாகிய தென்னும் வார்த்தையும்
பெற்றிலம் பிறந்திலம் என்னும் பேறலால்
முற்றுவ தென் இனிப் பழியின் மூழ்கினோம். 20

சேனைகாவலன் பேச்சு:—

தேவரும் அடங்கினர், இயக்கர் சிந்தினர்
தாவரும் தானவர் தருக்குத் தாழ்ந்தனர்
யாவரும் இறைவர்என் றிறைஞ்சும் மேன்மையர்
மூவரும் ஒதுங்கினர் உனக்கு மொய்ம்பினோய். 21

மகோதரன் பேச்சு:—

இடுக்கிவண் இயம்புவ தில்லை ஈண்டெனை
விடுக்குவை யாமெனில் குரங்கை வேரறுத்து
ஒடுக்கரும் மனிதரை உயிருண்டு உன்பகை
முடிக்குவன் யான்என முடியக் கூறினான். 22

விபீஷணன் பேச்சு:—

எந்தைநீ, யாயும்நீ, எம்முன் நீ,தவம்
வந்தனைத் தெய்வம்நீ, மற்றும் முற்றுநீ
இந்திரப் பெரும்பதம் இழக்கின் றாய்என
நொந்தனன் ஆதலின் நுவல்வ தாயினேன். 23

உறுதி இன்னமொன் றுரைக்கு,வம் நீயும்உன் கிளேயும்
இறுதி யின்றியே எஞ்சுதல் வேண்டுமேல் இமையோர்
சிறைவி டுக்குதி இகலினேத் தவிருதி செவ்வேள்
அறைகழற்றுணே அரணம்என் றுன்னியே அமர்தி. 18

சூரன் சபை :—*சூரன் முன்னுரை*

அழிந்ததுஇத் திருநகர், அளப்பில் தானேகள்
கழிந்தன, செறிந்தது களேப ரத்தொகை
கிழிந்தது பாரகம், கெழீஇய சோரியாறு
ஒழிந்ததுஎன் ஆணேயும், உயர்வும் தீர்ந்ததால். 19

ஒற்றென வந்தஅவ் வொருவன் தன்னேயும்
பற்றிவெஞ் சிறையிடைப் படுத்தி னேனலேன்
செற்றிலன், ஊறதே எனினும் செய்திலேன்
எற்றினி வசையுரைக் கீறு கூறுகேன். 20

காலசித்தன் பேச்சு :—

அண்டர்கள் ஒடுங்கினர் அரக்கர் அஞ்சினர்
எண்டிசைக் கிழவரும் ஏவல் ஆற்றுவர்
மணடமர் அவுணரின் வலியர் பூதராம்
கண்டனம் இன்றுயாம் கலியின் வண்ணமே. 21

பாநுகோபன் பேச்சு :—

ஆண்டெனே விடுத்தியேல் அமர தாற்றிட
மூண்டிடும் அவர்தொகை முருக்கித் தேவராய்
ஈண்டுறு வோரையும் இமைப்பில் வென்றுபின்
மீண்டிடு வேன்என விளம்பி ஞனரோ. 22

சிங்கமுகன் பேச்சு :—

மந்தி ரத்தரும் தானேயந் தலேவரும் மகாரும்
தந்த மக்கியல் வன்மையே சாற்றிய தல்லால்
இந்தி ரப்பெருந் திருவுறும் உன்தனக் கியன்ற
புந்தி சொற்றிலர் இம்மொழி கேள்எனப் புகல்வான். 23

அனையவன் சிறுவர்எம் பெருமஉன் பகைவரா னவரை அம்மா
இனையர்என் றுணர்தியேல் இருவரும் ஒருவரும் எதிர்கி லாதார்
முனிவரும் அமரரும் முழுதுணர்ந் தவர்களும் முற்று மற்றும்
நினைவரும் தகையர்நம் வினையினுல் மனிதராய் எளிதின் நின்ருர்.

இசையும் செய்கையும் உயர்குலத் தியற்கையும் எஞ்ச
வசையும் கீழ்மையும் மீக்கொளக் கிளையொடு மடியாது
அசைவில் கற்பின் அவ் வணங்கைவிட் டருளுதி இதன்மேல்
விசையம் இல்லெனச் சொல்லினன் அறிஞரின் மிக்கோன். 25

இராவணன் பரிகாசப் பேச்சு :—

ஊன வில்இறுத்து ஓட்டைமா மரத்துள்அம் போட்டிக்
கூனி சூழ்ச்சியால் அரசிழந்து உயர்வனங் குறுகி
யான்இ ழைத்திட இல்லிழந்து இன்னுயிர் சுமக்கும்
மானி டன்வலி நீயலாது யாருளர் மதிப்பார். 26

விபீஷணன்மீது குற்றம் சாற்றுதல் :—

நண்ணின மனிதரை நண்பு பூண்டனை
எண்ணினை செய்வினை என்னை வெல்லுமாறு
உன்னினை அரசின்மேல் ஆசை ஊன்றினை
திண்ணிதுன் செயல்பிறர் செறுநர் வேண்டுமோ. 27

அஞ்சினை யாதலின் அமர்க்கும் ஆளலை
தஞ்சென மனிசர்பால் வைத்த சார்பினை
வஞ்சனை மனத்தினை பிறப்பு மாற்றினை
நஞ்சினை உடன்கொடு வாழ்தல் நன்றரோ. 28

போர்முனையில் இராமனும் இராவணனும் :—

அறங்க டந்தவர் செயல்இதென் றுலகெலாம் ஆர்ப்ப
நிறங்க ரிந்திட நிலம்விரல் கிளைத்திட நின்ருன்
இறங்கு கண்ணினன் எல்லழி முகத்தினன் தலையன்
வெறுங்கை நாற்றினன் விழுதுடை ஆலன்ன மெய்யன். 29

ஞானம் தான்உரு வாகிய நாயகன் இயல்பை
யானும் நீயுமாய் இசைத்துமென் ருல்அஃ தெளிதோ
மோனம் தீர்கலா முனிவரும் தேற்றிலர் முழுதும்
தானும் காண்கிலன் இன்னமும் தன்பெருந் தலைமை. 24

கெடுதல் இல்லதோர் வளனெடு நீயும்நின் கிளையும்
படுதல் இன்றியே வாழ்திஎன் றின்னன பகர்ந்தேன்
இடுதல் கொண்டிடு சிறையிடைத் தேவரை இன்னே
விடுதல் செய்குதி என்றனன் அறிஞரின் மிக்கான். 25

சூரன் பரிகாசப் பேச்சு :—

காற்றில் தள்ளுண்டு நெருப்பினில் சூடுண்டு கங்கை
யாற்றில் தாக்குண்டு சரவணம் புக்கலை யுண்டு
வேற்றுப் பேரிடம் பாலுண்டு, அழு தேவிளை யாடும்
நேற்றைப் பாலனை யோபரம் பொருளென நினைந்தாய். 26

சிங்கமுகன்மீது குற்றம் சாற்றுதல் :—

மறந்தனை இழந்தனை மானம் நீங்கினை
சிறந்திடும் அவுணர்தம் சீர்த்தி மாற்றிடப்
பிறந்தனை ஈண்டொரு பயனும் பெற்றிலை
இறந்தனை போலும்நீ இருந்து ளாய்கொலோ. 27

உரைப்ப தென்இனி ஒருவயிற் றென்னுடன் உதித்துப்
பெருக்க முற்றனை நம்குலப் பகைஞரைப் பெரிதும்
நெருக்க லின்றியே அவர்கள்பாற் பட்டனை நீயே
இருக்க மற்றொரு தெவ்வரும் வேண்டுமோ எனக்கே. 28

போர்முனையில் முருகனும் சூரனும் :—

மான வேற்படை வன்மையும் விற்றொழில் வலியும்
ஏனை யாவுள வன்மையும் கண்டனம் இனிமேல்
பானல் வாய்மைந்தன் செய்வது பார்ப்பன்என் றுன்னி
மோன மாகியே நின்றனன் அவுணர்கள் முதல்வன். 29

நின்ற வன்நிலை நோக்கிய நெடுந்தகை இவனைக்
கொன்றல் உன்னிலன் வெறுங்கைநின் றானெனக் கொள்ளா
இன்ற விந்தது போலுமுன் தீமைஎன் றிசையோடு
ஒன்ற வந்தன வாசகம் இனையன உரைத்தான். 30

சிறையில் வைத்தவள் தன்னைவிட் டுலகினில் தேவர்
முறையில்வைத்துநின் தம்பியை இராக்கதர் முதற்பேர்
இறையில் வைத்தவற் கேவல்செய் திருத்தியேல் இன்னும்
தறையில் வைக்கிலன் நின்தலை வாளியில் தடிந்து. 31

அல்லை யாமெனின் ஆரமர் ஆற்றெனும் தோற்றம்
வல்லை யாமெனின் உனக்குள வலியெலாம் கொண்டு
நில்லை யாவென நேர்நின்று பொன்றுதி எனினும்
நல்லை யாகுதி பிழைப்பினி உண்டென நயவேல். 32

ஆள் யாவுள அமைந்தன மாருதம் அறைந்த
பூளை யாயின கண்டனை இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல். 33

கும்பகருணன் இறந்தபொழுது இராவணன் புலம்பல் :—

மின்னிலைய வேலோனே யான்உன் விழிகாணேன்
நின்னிலையா தென்றேன் உயிர்பேணி நிற்கின்றேன்
உன்னிலைமை ஈதாயின் ஓடைக் களிறுந்திப்
பொன்னுலக மீளப் புகாரோ புரந்தரனார். 34

பொருளின் நீர்மையாற் புனைகலன் மாற்றலிற் புவிமேல்
இருளின் நீர்மையாய்த் தோன்றினேன் அற்புத மெய்தி
மருளின் நீர்மையால் நின்றது நோக்கியே வள்ளல்
அருளின் நீர்மையால் இனையன மாற்றங்கள் அறைவான். 30

இந்தி ரன்தனி மதலையை இமையவர் தம்மை
அந்த மில்பகல் சிறையிடைப் படுத்தனை அதற்கா
முந்தொர் ஒன்றனை விடுத்தனம் ஆங்கவன் மொழியும்
சிந்தை கொண்டிலை விடுத்திலை அமரர்தஞ் சிறையும். 31

அன்ன தன்மையால் ஈண்டுயாம் வந்தனம் அமரில்
தன்னை நேரிலா திருந்திடு தாரகன் தன்னை
முன்னம் அட்டிடு முறையென நின்னையும் முனிவால்
இன்ன வைகலே அடுதும்என் றேகினம் மீண்டும். 32

ஈண்டு நின்புடை ஈண்டிய இலக்கம்வெள் ளத்து
நீண்ட தானையும் நின்சிலை வன்மையும் நின்றால்
தூண்ட லுற்றிடு தெய்வதப் படைகளும் தொலைந்து
மாண்டு போயது கண்டனை வறியனாய் நின்றாய். 33

நெடிய தாரகற் செற்றவேல் இருந்தது, நின்னை
அடுதல் இங்கொரு பொருளுமன் று அரிதும்மற் றன்றால்
படையி ழந்திடு நின்னுயிர் உண்டிடில் பழியாய்
முடியும் என்றுதாழ்க் கின்றனம் தருமத்தின் முறையால். 33-a

சிங்கமுகன் இறந்தபோது சூரன் புலம்பல் :—

[1] உண்டுபோர் என்னின் உளங்களிக்கும் உன்னுயிரை
கொண்டுபோ னான்இன்று கூற்றன்என வேகேட்கில்
தண்டுழாய் மாலும் சதுர்முகனும் இந்திரனும்
பண்டுபோல் தத்தம் பதியாளப் போகாரோ. 34

---

[1]Cf. *"நானில மதனில் உண்டு போர்என நவிலின் அச்சொல்*
*தேனினும் களிப்புச் செய்யும் சிந்தையர்"*
—கம்பராமாயணம், கிங்கரர், 4.

அண்டத் தளவும் இனைய பகர்ந்தழைத்துப்
பண்டைத்தன் நாமத்தின் காரணத்தைப் பாரித்தான்
தொண்டைக் கனிவாய் துடிப்ப மயிர்பொடிப்பக்
கெண்டைத் தடங்கண்ணுள் உள்ளே கிளுகிளுத்தாள். 35

இந்திரசித்தன் முறையீடு :—

நிலஞ்செய்து விசும்பும் செய்த நெடியவன் படைநின் றனே
வலஞ்செய்து போவ தானல் மற்றினி வலிய துண்டே
குலஞ்செய்த பாவத் தாலே கொடும்பழி தேடிக் கொண்டோம்
சலஞ்செயின் உலக மூன்றும் இலக்குவன் முடிப்பன் தானே. 36

ஆதலால் அஞ்சி னேன்என் றருளலை ஆசை தான்அச்
சீதைபால் விடுதி யாயின் அனையவர் சீற்றம் தீர்வர்
போதலும் புரிவர் செய்த தீமையும் பொறுப்பர் உன்மேல்
காதலால் உரைத்தேன் என்றான் உலகெலாம் கலக்கி வென்றான்.

இராவணன் மறுமொழி :—

பேதைமை உரைத்தாய் மைந்த உலகெலாம் பெயரப் பேராக்
காதைஎன் புகழி னேடு நிலைபெற அமரர் காண
மீதெழு மொக்குள் அன்ன யாக்கையை விடுவ தல்லால்
சீதையை விடுவ துண்டோ இருபது திண்டோள் உண்டால். 38

வென்றிலன் என்ற போதும் வேதம்உள் ளளவும் யானும்
நின்றுளன் அன்றே மற்றவ் விராமன்பேர் நிற்கு மாயின்
பொன்றுதல் ஒருகா லத்தும் தவிருமோ பொதுமைத் தன்றே
இன் றுளார் நாளை மாள்வார் புகழுக்கும் இறுதி யுண்டோ. 39

என்னத் தனதண்டம் எங்கும் செவிபடத்
தன்னத் தனியோன்அ ரற்றும்ஒலி தாங்கேளா
நன்னத் தவனும்ந ளினத்தி னில்உதித்த
அன்னத் தவனும்ம கத்தவனும் ஆர்த்தனரே. 35

பானுகோபன் முறையீடு :—

மாயை தந்ததொல் படையினல் செறுநரை மயக்கித்
தூய நீர்க்கடல் இட்டனன் சுரர்அது புகல
ஆய காலையில் வேல்விடுத்து அவர்தமை மீட்ட
சேயை வெல்வது கனவிலும் இல்லையால் தெரியின். 36

வெஞ்ச மம்செய வல்லவர் கிடைத்திடின் மிகவும்
நெஞ்ச கம்தளிர்ப் பெய்துவன் நேரலர் சமருக்கு
அஞ்சி னேனென்று கருதலை அரசநீ இன்னும்
உஞ்சு வைகுதி யோஎனும் ஆசையால் உரைத்தேன். 37

உறுதி ஒன்றினி மொழிகுவன் பொன்னகர் உள்ளார்
சிறைவி டுக்குதி நம்மிடைச் செற்றம தகற்றி
அறுமு கத்தவன் வந்துழி மீண்டிடும் அதற்பின்
இறுதி யில்பகல் நிலைக்கும்நின் பெருவளம் என்ருன். 37-a

சூரன் மறுமொழி :—

என்னிவை உரைத்தாய் மைந்த இன்றுயான் எளிய ளுகிப்
பொன்னுல குள்ள தேவர் புலம்புகொள் சிறையை நீக்கின்
மன்னவர் மன்னன் என்றே யார்எனை மதிக்கற் பாலர்
அன்னது மன்றி நீங்கா வசையுமொன் றடையும் மாதோ. 38

பேரெழில் இளமை ஆற்றல் பெறலரும் வெறுக்கை வீரம்
நேரறு சுற்றம் யாக்கை யாவையும் நிலைய வன்றே
சீரெனப் பட்ட தன்றோ நிற்பது செறுநர் போரில்
ஆருயிர் விடினும் வானோர் அருஞ்சிறை விடுவ துண்டோ. 39

விட்டனன் சீதை தன்னை என்னலும் வானோர் நண்ணிக்
கட்டுவ தல்லால் பின்னை யானெனக் கருது வாரோ
பட்டனன் என்ற போதும் எளிமையிற் படுகி லேன்யான்
எட்டினோ டிரண்டும் ஆய திசைகளை எறிந்து வென்றேன். 40

இந்திரசித்து இறந்தபொழுது இராவணன் புலம்பல் :—

மைந்த வோஎனும் மாமக னேஎனும்
எந்தை யோஎனும் என்னுயி ரேஎனும்
முந்தி னேன்உனை நானுள னோஎனும்
வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையான். 41

புரந்த ரன்பகை போயிற் றோஎனும்
அரந்தை வானவர் ஆர்த்தன ரோஎனும்
கரந்தை சூடியும் பாற்கடற் கள்வனும்
நிரந்த ரம்பகை நீங்கின ரோஎனும். 42

மகனை இழந்த மண்டோதரி புலம்பல் :—

தலையின்மேல் சுமந்த கையள் தழலின்மேல் மிதிக்கின் றாள்போல்
நிலையின்மேல் மிதிக்கும் தாளள் நேசத்தால் நிறைந்த நெஞ்சள்
கொலையின்மேற் குறித்த வேடன் கூர்ங்கணை உயிரைக் கொள்ள
மலையின்மேல்மயில்வீழ்ந் தென்ன மைந்தன்மேல் மறுகி வீழ்ந்தாள்.

கலையினால் திங்கள் என்ன வளர்கின்ற காலத் தேஉன்
சிலையினால் அரியை வெல்லக் காண்பதோர் தவமும் செய்தேன்
தலையிலா உடலைக் காண எத்தவம் செய்தேன் அந்தோ
நிலையிலா வாழ்வை இன்னும் நினைவனோ நினைவி லாதேன். 44

பஞ்செரி யுற்ற தென்ன அரக்கர்தம் பரவை யெல்லாம்
வெஞ்சின மனிதர் கொல்ல விளிந்ததே மீண்ட தில்லை
அஞ்சினேன் அஞ்சி னேன்இச் சீதையென்று அமிழ்தாற் செய்த
நஞ்சினால் இலங்கை வேந்தன் நாளைஇத் தகையன் அன்றோ. 45

இறந்திட வரினும் அல்லால் இடுக்கண்ஒன் றுறினும் தம்பால்
பிறந்திடும் மானந் தன்னை விடுவரோ பெரியர் ஆனோர்
சிறந்திடும் இரண்டு நாளைச் செல்வத்தை விரும்பி யானும்
துறந்திடேன் பிடித்த கொள்கை சூரன் என் றொருபேர் பெற்றேன்.

பானுகோபன் இறந்தபொழுது சூரன் புலம்பல் :—

மைந்தவோ என்தன் மதகளிறே வல்வினையேன்
சிந்தையோ சிந்தை தெவிட்டாத தெள்ளமுதோ
தந்தையோ தந்தைக்குத் தந்தையிலான் கொன்றனனே
எந்தையோ நின்னை இதற்கோ வளர்த்தனனே. 41

உன் ஆணைக் கஞ்சி உறங்கா துழன்றிடுமால்
இந்நாள் தனில்நீ இறந்தாய் எனமகிழ்ந்து
பன்னகப் பாயல் படுத்திருவர் கால்வருடத்
தொன்னுள் எனவே கவலையின்றித் துஞ்சானே. 42

மகனை இழந்த பதுமை புலம்பல் :—

நிலத்தில் வீழ்ந்து சரிந்து நெடுமயிர்
குலைத்த கையள் குருதிபெய் கண்ணினள்
அலைத்த உந்தியள் ஆற்றரும் துன்பினள்
வலைத்த லைப்படும் மஞ்ஞையின் ஏங்கினுள். 43

பண்டே வானம் செந்தழல் மூட்டிப் பகைமுற்றும்
கொண்டே சென்றாய் அப்பகல் உன்தன் கோலத்தைக்
கண்டேன் இன்றே இக்கிடை தானும் காண்பேனே
விண்டேன் அல்லேன் இவ்வுயிர் தன்னை வினையேனே. 44

[1]நையா நிற்கும் தேவர்த மக்கும் நனிதுன்பம்
செய்யா நிற்றல் நன்றல தென்றேன் அதுதேராது
ஐயா நின்னைத் தோற்றனன் மன்னன் அவனும்தான்
உய்வான் கொல்லோ தன்னுயிர் தானும் ஒழியாதே. 45

---

[1] Cf. "*நையா நின்றனன் நான்இருந் திங்ஙன்*
*மெய்வா னோர்திரு நாடு மேவினுய்*
*ஐயா நீஎன தாவி என்பதும்*
*பொய்யோ பொய்யுரை யாத புண்ணியா*"
—கம்பர், அரசியல், 9

இராவணன் இறந்தபொழுது விபீஷணன் புலம்பல் :—

உண்ணுதே உயிருண்ணு தொருநஞ்சு
சனகியென்னும் பெருநஞ்சு உன்னைக்
கண்ணுலே நோக்கவே போக்கியதே
உயிர்,நீயும் களப்பட் டாயே
எண்ணுதேன் எண்ணியசொல் இன்றினித்தான்
எண்ணுதியோ எண்ணில் ஆற்றல்
அண்ணுவோ அண்ணுவோ அசுரர்கள்தம்
பிரளயமே அமரர் கூற்றே. 46

அன்றெரியின் விழுவேத வதிஇவள்காண்
உலகுக்கோர் அன்னை யென்று
குன்றனைய நெடுந்தோளாய் கூறினேன்
அதுமனத்துட் கொள்ளா தேயே
உன்தனது குலமடங்க உருத்தமரிற்
படக்கண்டும் உறவா காதே
பொன்றினையே இராகவன்தன் புயவலி இன்று
அறிந்துதான் போகின் றுயே. 47

சூரன் இறந்தபொழுது இரணியன்[1] புலம்பல் :—

நன்றென் பதைஉணராய் நானுரைத்த வாசகங்கள்
ஒன்றும் சிறிதும் உறுதியெனக் கொண்டிலையே
பொன்றும் படிக்கோ பொருதாய் புரவலனே
என்றுன்னை முன்போல் இருந்திடநான் காண்பதுவே. 46

ஆழியான் வேதன் அமரர்க் கிறைமுதலோர்
வாழியாய் என்று வழுத்தியிட வைகிய நீ
பூழியார் மேனிப் புராரிசிறு வன்தேரில்
கோழியாய் நின்று விலாவொடியக் கூவுதியோ. 46 a

ஓகையால் அண்டத் துயிர்களெலாம் வந்திறைஞ்சச்
சேகையாய் மல்கும் திருத்தாள்கொண் டுற்றிடும்நீ
வாகையார் கின்ற வடிவேற் கரத்தோனைத்
தோகையாய் நின்று சுமக்குதியோ தோன்றலோ. 46-b

பிள்ளைப் பிறைபுனைந்த பிஞ்ஞகன்தன் காதலனைப்
புள்ளிக் கலாபப் பொறிமயிலாய்ப் போற்றும்எல்லை
எள்ளற் பொருட்டால் யான்முன் உரைத்தவற்றை
உள்ளத் திடைஎந்தாய் உன்னுதியோ உன்னலயோ. 47

---

[1] இரணியன் சூரன் மக்களில் ஒருவன்.

# மூவர் தமிழும் முருகனும்

தமிழ்நாட்டில் முருகப்பெருமான் கோவில் கொண்டுள்ள இடங்கள் பலவாகும். அவற்றுள் சில பழம்பதிகள் தேவாரப் பாமாலை பெற்றுத் திகழ்கின்றன. திருமுருகாற்றுப்படையில் முருகவேளுக்குரிய படை வீடுகளுள் ஒன்ருகக் குறிக்கப்பட்ட திருப்பரங்குன்றம் தேவாரப் பாடல்பெற்ற பதிகளுள் ஒன்று. இன்னும், முருகன் பெயரோடு தொடர்புற்று விளங்கும் பாடல் பெற்ற பதிகள் சிலவுண்டு. சோழநாட்டில் நாகபட்டினத்திற் கருகேயுள்ள வேளூர் என்னும் மூதூர் முருகன் பெயரைத் தாங்கிநிற்கின்றது. பழங்காலத்தில் சோழர் தலைநகராகத் திகழ்ந்த திருவாரூருக்குக் கீழ்த் திசையில் அமைந்த காரணத்தால் அவ்வூர் கீழ்வேளூர் என்னும் பெயர் பெற்றதுபோலும். அவ் வூரில் 'மாதவம் வளர்த்த வேலவன்' பெருமையை ஆன்ருேர் புகழ்ந் துள்ளார்கள். கீழ் வேளூருக்கு அண்மையிலுள்ள, சிக்கல் என்னும் பாடல் பெற்ற பதியில், கோயில் கொண்டருளும் 'சிங்கார வேலவர்' ஆண்டுதோறும் சிவபெருமானிடம் வேல் வாங்கும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக விளங்குகின்றது.

முருகனருள் பெற்ற மற்ருெரு மூதூர், தலையாலங் கானத்துக் கருகேயுள்ள பெருவேளூர் ஆகும். இப் பெரும் பதியை அப்பர் பெருமானும் திருஞான சம்பந்தரும் பாடியுள்ளார்கள்.

"விரிவிலா அறிவி னார்கள்
வேறொரு சமயம் செய்தே
எரிவினாற் சொன்ன ரேனும்
எம்பிராற் கேற்ற தாகும்
பரிவினாற் பெரியோ ரேத்தும்
பெருவேளூர் பற்றி னானை
மருவிநான் வாழ்த்தி உய்யும்
வகையது நினைக்கின்றேனே"

என்ற அருமைத் திருப்பாசுரம் அப்பரால் இப்பதியிலே அருளப்பெற்றதாகும். இந்நாளில், இவ்வூர், காட்டூர் ஐயன்பேட்டையென வழங்குகின்றது.

திருஞானசம்பந்தப் பெருமான் பிறந்தருளும் பேறு பெற்ற சீகாழியின் அருகேயுள்ள வைத்தீச்சுரன் கோயிலின் பழம்பெயர் புள்ளிருக்குவேளூர் என்பது. புள்ளும் மறையும் முருகவேளொடு இறைவனை வழிபட்டமையால் இப் பெயர் அவ் வூருக்கு அமைந்த தென்பர். முருகவேளாகிய முத்துக் குமாரன் அப் பதியிலே அமர்ந்து அடியார்க்கு இன்றும் அருள் புரிகின்றார். ஆதலால், கந்தபுரி என்ற பெயரும் அவ் வூருக்கு வழங்குகின்றது. அப்பதியில் அமைந்த முத்துக் குமாரனை ஆதரித்தழைத்து,

"மழலை ததும்பப் பழமறையை
வடித்துத் தெளித்த வார்த்தை யொன்று
மொழியும் பவளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்சேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே"

என்று குமரகுருபர அடிகள் வேண்டுகின்றார்.

இன்னும், சேயோன் என்றும், சேய் என்றும் குறிக்கப்படுகின்ற முருகன் திருவருளைப்பெற்ற ஊர் களில் ஒன்று முன்னாளில் சோழநாட்டிலே சிறந் திருந்தது. திருச்சேய்ஞலூர் என்பது அதன்பெயர். தேவாரப் பாடல்பெற்ற சேய்ஞலூர் என்னும் நல்லூர் சண்டேசுர நாயனாரைத் தோற்றுவித்த பெருமையும் உடையதாகும்.'

"பூந்தண் பொன்னி எந்நாளும்
பொய்யா தளிக்கும் புனல்நாட்டு
வாய்ந்த மண்ணித் தென்கரையின்
மன்ன முன்னாள் வரைகிழிய
ஏந்தும் அயில்வேல் நிலைகாட்டி
இமையோர் இகல்வெம் பகைகடக்கும்
சேந்த னளித்த திருமறையோர்
மூதூர் செல்வச் சேய்ஞலூர்"

என்று சேக்கிழார் பெருமான் இப் பதியின் பெருமையை அருளிப் போந்தார். சூரனோடு போர்புரிய எழுந்தருளிய சேயோன், சிவனை வழிபட்டுச் 'சங்காரப்படை' பெற்ற இடமே சேய்ஞலூர் ஆயிற்றென்று கந்தபுராணம் கூறும். 'தாதையைத் தாளற வீசிய சண்டிக்கு' அருள் செய்த தலைவனார் அமர்ந்த திருஆப்பாடியும் இதனருகே யுள்ளது.

இன்னும், கொங்கு நாட்டில் அமைந்துள்ள முருகப்பதி திருமுருகன் பூண்டி எனப்படும். 'செருமலைத் திருவேற் செங்கைத் தேசிகன் வழிபாடாற்றும் பெருமை' வாய்ந்தது திருமுருகன் பூண்டியென்று

புராணம் கூறும். சேரமான் பெருமாள் உவந்தளித்த பொருளனைத்தையும் பறிகொடுத்த சுந்தரர் 'கொடுகு வெஞ்சிலை வடுகவேடுவர் கூறை கொண்டு ஆறலைக்கு மிடம்' என்று பாடி இறைவனருளை நாடிய பழம்பதி இப் பூண்டியே.

இக் காலத்தில் முருகன் அருள் பெற்ற ஊர்களின் பெயர் மாறியும் உருக்குலைந்தும் வழங்குகின்றன. பெரும்பாலும் வேளூர்-வெள்ளூர் என்றும், சேயூர்-செய்யூர் என்றும் சிதைந்துள்ளன. கீழ்வேளூர், கீவளூ ராயிற்று. சேய்ஞலூர், செங்கனூர் எனச் சிதைந்தது. இங்ஙனம் உருக்குலைந்திருக்கும் ஊர்ப் பெயர்களைத் திருத்தியமைத்தல் முருகவேளுக்குச் செய்யும் திருத் தொண்டுகளுள் ஒன்றாகும்.

———

○

திரு. ரா. பி சேதுப் பிள்ளை அவர்கள்

*இயற்றிய*

## “வழிவழி வள்ளுவர்”

என்னும் நூல் இன்னும் சில நாட்களில் வெளிவரும். வள்ளுவர் வாய்மொழி தமிழ்க் கவிதையை வழிவழியாக வளம் படுத்துவது ; தமிழ்ப் பண்பாட்டை வளர்ப்பது என்பதை இந்நூலிலே தெளிவுறக் காணலாம். திருவள்ளுவர் குறளை இளங்கோவடிகள் முதலிய பெருங்கவிஞர் கண்கொண்டு நோக்கி, அன்னார் தரும் விளக்கத்தால் வள்ளுவர் உள்ளத்தைத் தெள்ளத் தெளிய உணர்த்துவது இந்நூல்.

○

Asian Printers, Madras-5